# ஸ்ரீவாதிராஜரின்

# ஹரி ஸர்வோத்தம ஸார

திரு. தாவணகெரெ பீமராவ்
அவர்களின் கன்னட உரையை
அனுசரித்து

தமிழில்

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
89044 58276. sathyatv123@gmail.com
jagannathakesava.blogspot.com

# என்னுரை

ஸ்ரீவாதிராஜரின் ஹரிசர்வோத்தம ஸாரம், 16 ஸ்லோகங்களைக் கொண்ட ஒரு மிகச்சிறிய கிரந்தம். கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது என்பதைப் போல, இந்த சிறிய கிரந்தத்தில் உள்ள விஷயங்கள் மிகவும் அபாரமானவை. ஹரி சர்வோத்தமத்வத்தை வலியுறுத்தும் மாத்வ ஹரிபக்தர்கள் அனைவரும் கண்டிப்பாக படித்து, அறிந்து கொள்ள வேண்டிய கிரந்தம் இது. தாவணகெரெ திரு.பீமராவ் உரை எழுதிய இந்த கிரந்தத்தை எனக்கு பாடம் எடுத்த என் குருவான ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசருக்கு (ஹரதி பிரகலாதாசார்) என் அனந்தானந்த நமஸ்காரங்கள். இதற்கு விரிவான ஒரு முன்னுரை எழுதிக் கொடுத்த திரு.லட்சுமிபதிராஜா அவர்களுக்கும் அனேக நன்றிகள்.

இந்த அற்புதமான புத்தகத்தை வெளியிட பொருளுதவி செய்த அந்த ஹரிபக்தருக்கும் எமது அனந்தானந்த நன்றிகள்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**
**21-04-2021 ப்லவ நாம சம்வத்ஸர ஸ்ரீராமநவமி**

# முன்னுரை

ஸ்ரீ மத்வ மதப் பரம்பரையில் உடுப்பி அஷ்ட மடங்களில் ஸோதே மடத்தின் பீடாதீஸராக அலங்கரித்தவர் ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர். மத்வ சித்தாந்தத்தில் வ்யாஸ ஸாஹித்யம் மற்றும் தாஸ ஸாஹித்யம் என இரண்டுக்குமே தனது பங்களிப்பை அளித்த மஹனீயர். பலதரப்பட்ட காவிய, ஸ்தோத்திர, டிப்பணி மற்றும் வ்யாக்யான கிரந்தங்களை இயற்றியதுடன், கன்னடத் திலும், துளு பாஷையிலும் 'ஹயவதன' முத்திரையிலே பலதரப்பட்ட க்ருதிகளையும் ரசனை செய்துள்ளார்.

'ஸ்ரீ ஹரியே ஸர்வோத்தமன்' எனும் தத்துவத்தை தம்முடைய பலதரப்பட்ட கன்னட பதங்களிலே வர்ணித்திருக்கும் ஸ்ரீ வாதிராஜர், இதனை பிரத்யேகமாக பலவித உதாரணங்களுடன் நிரூபிக்கும் வகையில் கன்னடத்தில் அருளிய மிகச் சிறிய கிரந்தமே 'ஹரி ஸர்வோத்தம ஸார' என்பதாகும்.

ஸ்ரீ வாதிராஜர் அருளிய 'ஹரி ஸர்வோத்தம ஸார' என்பது 16 பத்யங்களில் அமைந்த கன்னட கிரந்தம் ஆகும். வேதங்களில், உபநிஷத்துக்களில், ஸாத்வீக புராணங்களில், இதிஹாஸ ங்களில் தெளிவாக விளக்கப்பட்டுள்ள 'ஹரி ஸர்வோத்தமத்வ' தத்துவத்தை ஸ்ரீ வாதிராஜர் பல்வேறு வகைகளில் ஆராய்ந்து நமக்கு ஸந்தேகம் எழும் இடங்களில் கேள்விகளை அவரே எழுப்பி, அதற்கு சரியான வகையில் விளக்கமளித்து, "ஸ்ரீ ஹரியே ஸர்வோத்தமன்; அவனே பரபிரம்மம், அனந்தானந்த கல்யாண குண பரிபூரணன்; ஸர்வ தோஷ தூரன்" என ஸ்பஷ்டமாக நிரூபணம் செய்துள்ளார். ஸமஸ்க்ருதம் அறியாத பாமரரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் கன்னடத்தில், ஸாஸ்திரக் கடலில் முத்தெடுத்து, சுவையாக, ஸஜ்ஜனர்களின் மேல் கருணை கொண்டு இதனைப் படைத்து ள்ளார் ஸ்ரீ வாதிராஜர். ஸ்ரீ ஹரியின் ஸர்வோத்தமத்வத்தை நிரூபிக்கும் வகையில் உதாரணங்களைக் கூறி விளக்குகிறார்.

முதல் பத்யத்தில் ஶ்ரீ வாதிராஜர், பகவான் த்ரிவிக்ரமனாகி வளர்ந்தபோது, பகவானின் பாதத்தைத் தமது கமண்டல ஜலத்தால் அலம்பியவர் பிரம்மா; அலம்பிக் கொண்டவர் ஶ்ரீ விஷ்ணு; பாதம் அலம்பிய தீர்த்தத்தை ப்ரோக்ஷணை செய்து கொண்டவர் ருத்ர பகவான். அதேபோல் பிரம்மாவினுள் இருந்து படைத்தலைச் செய்பவனும், சிவனுள் இருந்து அழித்தலைச் செய்பவனுமான ஶ்ரீ ஹரி, தானே விஷ்ணுவாக, வாஸுதேவனாக இருந்து காக்கும் தொழிலைப் புரிபவன். பாற்கடலைக் கடையும் போது உதித்த மஹாலக்ஷ்மி, பிரம்ம, ருத்ராதி தேவதைகளிடத்தில் தோஷங்களைக் கண்டு, தோஷம ற்றவனான ஶ்ரீ ஹயவதனனுக்கு மாலை அணிவித்தாள். மேற்கண்ட உதாரணங்களில் ஶ்ரீ ஹரியே ஸர்வோத்தமன் என்பது தெளிவாகப் புலப்படுவதை ஶ்ரீ வாதிராஜர் "கால தொளதவனொப்ப தொளெஸி கொண்டவனொப்ப மௌளிய மேலே ஜலவ தரிஸிதவனொப்ப" போன்ற பதங்களினால் எளிதாக விளக்கியுள்ளார்.

இரண்டாம் பத்யத்தில், பிரம்மாவின் தலையைக் கத்தரித்த பாவம் போக்க, சிவன் காசிக்குச் சென்று விஷ்ணுவின் பாதம் பணிந்தார் என்றிருக்க, ஶ்ரீ ராமன் ராவணனைக் கொன்றதால் உண்டான ப்ரஹ்மஹத்ய தோஷத்தைப் போக்க, ராமேஸ்வரத்தில் சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்தார் என்பது சரியல்ல. அங்கு சிவபெருமான் அமர்ந்து ராம ஸேதுவை தரிசனம் செய்து கொண்டு தமது தோஷங்களைப் பரிகாரம் செய்து கொண்டுள்ளார் எனவும், இது அஸுர மோகத்திற்காக எனவும் அறிய வேண்டும் என்று ஶ்ரீ வாதிராஜர் குறிப்பிட்டு ள்ளார்.

மூன்றாம் பத்யத்தில், பகவானின் வேறு அஸுர ஸம்ஹார லீலைகளையும் குறிப்பிட்டு, எந்தவொரு `ராவண வதம்' புரிந்த சரித்திரமான ராமாயணம், புண்ணியக் கதையாக போற்றப் படுகிறதோ, அந்த ஶ்ரீ ராமனுக்கு எவ்விதம் தோஷம் ஏற்படும்? ருத்ரனின் மூலமாக ப்ரஹ்மாவின் தலையைக் கொய்த

போதும், கஸ்யபரின் மகனான ஹிரண்யகஸிபுவை நரசிம்மனாக வந்துக் கொன்ற போதும், ஸ்ரீ ஹரிக்கு தோஷமில்லை எனில் அவதார ரூபமான ராமனுக்கும், ராவணனைக் கொன்றதால் தோஷமில்லை என அறிய வேண்டும் என்று ஸ்ரீ வாதிராஜர் விளக்குகிறார்.

நான்காம் பத்யத்தில், ராவணனின் ஸம்ஹாரத்திற்காக இலங்கை செல்ல ஸ்ரீ ராமன் கட்டிய ஸேதுவை (பாலத்தை) தரிசனம் செய்யும் மக்களுக்கு ப்ரஹ்மஹத்ய பாவம் கரைந்து விடும் என ஸ்ருதிகள் உரைப்பதால், பிரம்ம தேவரின் தலையைக் கத்தரித்து கையில் தரித்த சிவனுக்கு ப்ரஹ்ம ஹத்ய பாவம் வரக்கூடாது என்றே, அவருக்கு ஸேதுவின் தரிசனம் செய்விக்க, ஹயவதனனான ஸ்ரீ ராமன் சிவ லிங்க த்தை பிரதிஷ்டை செய்தான் என்பதை ஸ்ரீ வாதிராஜர் "ஸேது வெய கண்ட நரரிகே ப்ரஹ்மஹத்ய பாதக கெடுவுதெந்து ஸ்ருதி மன்னிஸலு முதலான பதங்களினால் விளக்கியுள்ளார்.

ஐந்தாம் பத்யத்தில் மேலும் ஸ்ரீ வாதிராஜர், ராம ஸேதுவின் மகிமைகளை உரைப்பதாய், ஸ்ரீ ராமன் அமைத்த பாலத்தின் தரிசனமே அனைவரின் பாவத்தையும் போக்கிவிடும் எனில் அந்த ஸ்ரீ ராமன் பாவம் செய்தவர்களை சுத்தமானவர்களாகச் செய்கிறான் என்றே அறிய வேண்டும் என உரைக்கிறார்.

ஆறாம் பத்யத்தில், விபீஷணன் மற்றும் சிவனிடையே தாரதம்யத்தில் அதிகமான வேறுபாடுகள் உள்ளது. எனினும், இருவரும் ஹரிபக்தர்கள் என்ற வகையில் ஒன்று பட்டு உள்ள தால், இருவரின் ப்ரதிமைகளையும் வெவ்வேறு இடங்களில் ப்ரதிஷ்டாபனை செய்து, உலகத்திற்கு கற்றுக் கொடுப்பதற் காகவும், ஹரிபக்தர்களான சிவன் மற்றும் விபீஷணனின் அருளை எல்லோரும் பெறுவதற்காகவுமே யன்றி, ஸ்ரீ ராமன் அவர்களின் அருளைப் பெற புரிந்த காரியமல்ல என ஸ்ரீ வாதிராஜர், "ஒந்து கடயல்லி விபீஷணன ப்ரதிஷ்டிஸிதனு,

மத்தொந்து கடயல்லி ஸதாசிவன பூஜிஸித" போன்ற பதங்களில் விளக்குகிறார்.

ஏழாம் பத்யத்தில் "ராம,ராம,ராம" என ராம நாமத்தை ஜெபிப்பதாலேயே தாம் வாழ்வதாகக் கூறும் மஹாதேவன், பகவத் பக்தன் எனவும், எனவேதான் தமது பக்தர்களான மஹா தேவன் மற்றும் விபீஷணனை பிரதிஷ்டாபனை செய்து, அவர்கள் உலகத்தாரால் வணங்கப்பட வேண்டியவர்கள் என்று ஸஜ்ஜனர்களுக்கு உணர்த்தியவன் கருணைக்கடலான ஸ்ரீ ராமன் எனவும் விளக்கி, அவன் அனைவரின் சம்சாரக் கடலை யும் தாண்டச் செய்யும் பரப்ரம்மன் எனவும் ஸ்பஷ்டமாக ஸ்ரீ வாதிராஜர் உரைத்துள்ளார்.

எட்டாம் பத்யத்தில் ஸ்ரீ கிருஷ்ணனின் மஹிமைகளைக் கூறத் தொடங்கி, தேவதைகள் பூபாரத்தை பரிகாரம் செய்ய வேண்ட, பகவான் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரிக்க, த்வாரகையிலே தேவதைகள் மூல ரூபத்திலும், ஸ்ரீ ஹரியின் ஆணையின்படி அவதார ரூபத்திலும் வந்து சேவித்தனர் எனவும், இதுவே ஸ்ரீ ஹரியின் ஸர்வோத்தமத்துவத்தைக் காட்டுகிறது என்பதையும் தெளிவாக எடுத்துக் கூறி, வ்ருகாஸூரனால் வந்த ஆபத்தைப் பரிஹரிக்க சிவன் வைகுண்டம் வரை சென்று சரணடைய, பகவான் சிவனைக் காத்து ரக்ஷித்தார் என்றிருக்க, ஸ்ரீ கிருஷ்ணன் புத்திர பாக்கியத்திற்காக சிவனைக் குறித்து தவம் புரிய கைலாஸ யாத்திரை புரிந்தது ஒரு விளையாட்டே என்று அறிய வேண்டும் என ஸ்ரீ வாதிராஜர் விளக்குகிறார்.

ஒன்பதாம் பத்யத்தில் ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீ கிருஷ்ணனின் கைலாச யாத்திரையைப் பற்றி தெளிவுபடுத்தும் விதமாக் கூறி, ஸ்ரீ கிருஷ்ணன் கைலாஸ யாத்திரையை வரம் பெறுவதற்காக மேற்கொண்டதாகக் கூறினால், அதனால் ஹரனே உத்தமன் என்று வாதம் புரிந்தால், "ஹரியும் ஹரனும் ஒன்றே" என்ற அத்வைத சித்தாந்தம் இங்கு பொய்யாகிவிடுகிறது எனவும் விவரித்து, ஸ்ரீ கிருஷ்ணனின் கைலாஸ யாத்திரை வெறும்

லீலை; புத்திர வரம் பெறுவதற்காக அல்ல என்றாகி, அது 'ஹரி ஸர்வோத்தம' தத்துவத்திற்கு மேலும் பலமாகிறது என வாதிடுகிறார்.

பத்தாம் பத்யத்தில், ஜகத்பதியான ஸ்ரீ ஹரி அனைவராலும் வணங்கப்படத்தக்கவன் என ஸ்ருதிகள் புகழ்வதினால், ஸ்ரீ கிருஷ்ணன் கைலாஸம் சென்று வணங்கியது, தனது பேரனான ருத்ர பகவானுக்கு ஒரு கௌரவத்தை அளிப்பதற்காக எனவும், அஞ்ஞானிகளுக்கு மோகத்தை உண்டு பண்ணுவதற்காக எனவும் அறிய வேண்டுமெனக் கூறி ஸ்ரீ வாதிராஜர் "தந்தே மக்கள பளிகே போதந்தே போகி முகுந்த பொம்மனிகெ, ஹரியதன கொடலெந்து" போன்ற பதங்களினால் விளக்குகிறார்.

பதினொன்றாம் பத்யத்தில், ஒவ்வொரு ரோமங்களிலும் கோடி லிங்கங்களை செய்யக்கூடிய, தரிக்கக்கூடிய சாமர்த்தியம் உள்ள ஹநுமானைத் தன் சேவகனாக செய்து கொண்டு அருள் புரியும் ஸ்ரீ ராமனே பரதெய்வம்; ஸர்வோத்தமன் எனவும், தைத்யர்களால் அபகரிக்கப்பட்ட வேதத்தை மீட்டு வந்து, ப்ரம்ம தேவருக்கு அருள் புரிந்தவன் ஸ்ரீ ஹயக்ரீவன்; அவனே ஸ்ரீ ராமன், இந்த உலகை ஆளும் பிரபு எனவும் அறிய வேண்டுமென ஸ்ரீ வாதிராஜர் உரைத்துள்ளார்.

பன்னிரெண்டாம் பத்யத்தில், சிவன் தனக்களித்த வரத்தை பரிக்ஷித்துப் பார்க்க, வ்ருகாஸூரன் சிவனின் தலை மேல் கையை வைப்பதற்கு துரத்தி வர, சிவபெருமான் அஞ்சி அசுரனிடமிருந்து தன்னைக் காத்துக்கொள்ளும் வழி அறியாமல் வைகுண்டத்திற்குச் சென்று சரணடைய, ஸ்ரீ ஹரி வருகாஸூரனை ஒரு ரூபத்தில் வந்து ஏமாற்றி அவனின் கையை அவன் தலை மேலேயே வைத்துக் கொள்ளும்படி செய்து அவனை அழித்து, சிவனைக் காத்து ரக்ஷணை புரிந்தது மிகவும் பிரசித்தம் எனவும், சரணாகதி அடைந்தவர்களைத் தவறாமல் காப்பாற்றுபவன் என்றே புகழப்படும் ஸ்ரீ ஹயக்ரவ

ரூபி பரமாத்மா, ஸ்ரீ ஹரியை விட்டால் வேறொரு பரதெய்வம் இல்லை எனவும் அறிய வேண்டும் என ஸ்ரீ வாதிராஜர் பறைசாற்றுகிறார்.

பதிமூன்றாம் பத்யத்தில், காஸி க்ஷேத்திரத்தில் ராம மந்திரத்தை உபதேசம் செய்யும் ருத்ர பகவான், ஞானிகளுக்கு ஞான உபதேசகராக இருப்பதாகவும், அந்த சிவன் உபதேசிக்கும் ராம மந்திரத்தால் போற்றப்படும் ஸ்ரீராமனே பரபிரம்மன், ஸர்வோத்தமன் எனவும் அறிந்து, மோக்ஷத்தை அளிக்கும் ஞானத்தை சிவனுக்கு உபதேசம் புரிந்த ஸ்ரீ ஹயக்ரீவனைத் துதிக்கும்படி வேண்டுகிறார் ஸ்ரீ வாதிராஜர்.

பதினான்காம் பத்யத்தில், சிவனே ஸர்வோத்தமன் எனக்கூறும் 6 தாமஸ புராணங்கள், பிரம்மனே ஸர்வோத்தமன் எனக்கூறும் 6 ராஜஸ புராணங்கள் இருக்க, ஞானிகள் விஷ்ணுவே ஸர்வோத்தமன் என்பதை உரைக்கும் சாத்வீக புராணங்களைத் தாங்கிப் பிடித்து, அதில் உள்ள ஸ்ருதி சம்மதமானவை என்று உரைக்கும் ஸ்ரீமதானந்த தீர்த்தரின் மதத்தை, விட்டு விட வேண்டாம் என அறிவுறுத்தும் " ஸ்ரீ வாதிராஜர் "துராக்ரஹ மாட பேட குரு மதவ பிட பேட ஸிரியரஸ ஹயவதன ஆரு புராணகள நோடி" போன்ற பதங்களினால் விளக்குகிறார்.

பதினைந்தாவது பத்யத்தில், பரபிரம்மன், ஜீவன் மற்றும் ஜடம் என அனைத்தும் வேறு என ஸ்ருதிகள் சொல்ல, வேதாதி க்ரந்தங்களுக்கு எதிரான அர்த்தங்களை அவற்றின் மேல் புகுத்தி, அனைத்தும் ஒன்றே என்று வாதிடுபவர்களுக்கு "ஸ்ரீ ஹரியும் ஜடமா?", "ஹரனும் ஜடமா?", "மனுக்கள் மற்றும் சப்தரிஷிகளும் ஜடமா? எனக் கேள்விகளை எழுப்பி அஞ்ஞானிகளைக் கண்டு ஸ்ரீ ஹயவதனன் நகைப்பதாக ஸ்ரீ வாதிராஜர் பரிஹாஸம் புரிகிறார்.

பதினாறாம் பத்யத்தில், நூறு ருத்ரர்களின் சாதனைக் காலமான 5000 பிரம்ம கல்பங்கள் காரியங்களில் சிரமப்பட்டாலும், ருத்ர பகவான் 14 லோகங்களை லயம் செய்வதற்கு சமர்த்தர் அல்ல

எனவும், விருப்பத்தாலேயே ஸம்ஹரிக்கும் சாமர்த்தியம் ஸ்ரீ ஹரிக்கே உண்டு எனவும், அவரே லய கர்த்தா எனவும் அறிந்து, பிரம்மா மற்றும் ருத்ரரை ஸ்ருஷ்டி ஸம்ஹார கர்த்தாக்கள் என எண்ணாமல், ஸ்ரீ பூர்ண ப்ரக்ஞரின் ஸித்தாந்தத்தைப் பின்பற்றுமாறு ஸ்ரீ வாத்தியார் கேட்டுக் கொண்டு இந்த கிரந்தத்தைப் பூர்த்தி செய்துள்ளார்.

'ஹரி ஸர்வோத்தம ஸாரத்தை' உரைக்கும் இத்தகைய உயரிய க்ரந்தத்தை தினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீ வாதிராஜரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹயக்ரீவரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவோமாக.

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்ரீ வாதிராஜர் அருளிய 'ஹரி ஸர்வோத்தம ஸார' என்ற உயரிய கிரந்தத்தின் மூலத்தையும், அதன் விஸேஷ அர்த்தங்களை பாமரரும் அறியும் வண்ணம் கன்னடத்தில் வழங்கிய திரு. தாவணகெரெ பீமராவ் அவர்களின் படைப்பை தமிழில் 'ஜகன்னாத கேஸவ' திரு.சத்ய நாராயணன் அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள் ளார். அவர் சமீபகாலத்தில் வெளியிட்டுள்ள பல மொழி பெயர்ப்பு நூல்களான 'வாதிராஜரின் ஸ்வப்ன பதம்', 'மோஹன தாஸரின் கோலு ஹாடு', 'பிரஸன்ன வேங்கட தாஸரின் நாராயண பஞ்சர', 'வாதிராஜரின் ஸ்ரீ கிருஷ்ண பால லீலே' போன்ற நூல்களின் வரிசையில், இதுவும் பெருமை சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. அவருக்கு ஸ்ரீ வாதிராஜ தீர்த்தரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹயக்ரீவ ரூபி பரமாத்மா ஆயுள், ஆரோக்கியம், ஐஸ்வர்யம் மற்றும் மனச்சாந்தி இவைகளை அருளி, இதுபோல் இன்னும் பல மொழிபெயர்ப்பு நூல்களை தமிழில் வெளியிட வேண்டும் என ப்ரார்த்தனை செய்கிறேன்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

**'பிரஸங்க பூஷணம்', 'பிரவசன பூஷணம்'**
**S.லக்ஷ்மிபதிராஜா, மேடவாக்கம், சென்னை**
**23-4-2021**

# கிரந்த அறிமுகம்

காமதேனுர்யதா பூர்வம் ஸர்வாபீஷ்ட பலப்ரதா ।
ததா கலௌ வாதிராஜ ஸ்ரீபாதோபீஷ்டத: ஸதாம் ॥

காமதேனுவினைப் போல, கலியுகத்தில் சஜ்ஜனர்களுக்கு இஷ்டார்த்தங்களை நிறைவேற்றும் ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகள், கன்னடத்தில் இயற்றியுள்ள பல்வேறு கிரந்தங்களில், இந்த ஹரிசர்வோத்தமசார'வும் ஒன்று. சம்ஸ்கிருதம் அறிந்தவர்கள்கூட இந்த மகானுபாவரின் கிரந்தங்களை வணங்குகின்றனர். மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய திவ்ய ஞானத்தைப் பெறுவதற்கு இவை உதவுகின்றன. இவரால் இயற்றப்பட்ட பத பத்ய ரூபங்களில் இருக்கும் கன்னட கிருதிகள் ஏராளமாக உள்ளன. இவ்வாறு ஸ்ரீவாதிராஜரின், நமக்குக் கிடைக்கக்கூடிய அனைத்து கன்னட கிரந்தங்களையும் அதன் அர்த்தங்களுடன் வெளியிடும் பாக்கியசாலி ஸ்ரீஹரிதாச ரத்னம் கோபாலதாசர் ஆவார். இந்த மிகப்பெரிய சேவையில் என்னையும்கூட சேர்த்துக்கொண்டு, புண்ணியசாலியாகும் வாய்ப்பு கொடுத்ததற்கு அவரை நான் வணங்குகிறேன்.

'ஸ்ரீஹரிசர்வோத்தமசார' என்பது இந்த கிரந்தத்தின் காரணப் பெயராக இருக்கிறது. அனைத்து நற்சாஸ்திரங்களால் விளக்கப்பட்ட தத்வங்களில் ஸ்ரீஹரிசர்வோத்தமத்வமே மிகவும் முக்கியமானதாகும். ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று சாஸ்திரங்களின் வாக்கியங்களால் நிரூபித்து, அந்த தத்வங்களில் நம்பிக்கையை உண்டுபண்ணுவதே இந்த கிரந்தத்தின் முக்கிய நோக்கம். இந்த முக்கிய தத்வத்தின் ஞானத்தினால், த்வைத வேதாந்தத்தின் ஜகத் ஸத்யத்வ, பஞ்சபேத தாரதம்யாதி மற்ற தத்வங்கள் (சித்தாந்தங்கள்) சுலபமாக நிரூபிக்கப்படுகின்றன.

'சர்வோத்தமம் ஸர்வதோஷவ்யபேதம் குணைரசேஷை: பூர்ணமன்யம் ஸமஸ்தாத் வைலக்ஷண்யாத் ஞாபயிதும் ப்ரவ்ருத்த்டா: ஸர்வே வேதா முக்யதோ நைவ ஜான்யத்' என்னும் மஹோபநிஷத், 'அனைத்து வஸ்துவிலும் இருப்பவனும், ஸர்வவஸ்துவிலிருந்து வேறுபட்டவனும், ஆன ஸ்ரீஹரியை, எவ்வித தோஷங்களும் அற்றவன் என்றும், அனைத்து நற்குணங்களைக் கொண்டவன் என்றும், அவனே சர்வோத்தமன் என்றும் அறியவேண்டும் என்னும் விளக்கத்தையே அனைத்து வேதங்களும் சொல்கின்றன' என்று சொல்கிறது.

ஸர்வோத்கர்ஷே தேவவேவஸ்ய விஷ்ணோர்மஹதத்பர்யம் நைவ ஜான்யத்ர ஸத்யம் | அவாந்தரம் தத்பரத்வம் ததன்யத் ஸர்வாகமானாம் புருஷார்த்தஸ்ததோsத:' என்னும் பைங்கி ஸ்ருதியும், பிரம்மாதி தேவதைகளுக்கு அதிபதியான விஷ்ணுவிற்கு சர்வோத்க்ருஷ்டத்தை சொல்வதே, அனைத்து வேதங்களின் மஹா தாத்பர்யம் என்று தெளிவாக சொல்கிறது. மற்றும் இந்த சர்வோத்க்ருஷ்ட ஞானத்தினாலேயே மோட்சம் கிடைக்கிறது என்றும் சொல்கிறது. ஜீவனை சம்சார சாகரத்திலிருந்து விடுதலை பெறச்செய்து, நித்யானந்த நிலையை அடையச் செய்வது, 'யமேவைஷ வைஷணதே தேன லப்ய:' ஆகிய ஸ்ருதிகள் சொல்வதைப் போல, ஸ்ரீவிஷ்ணு பிரசாதம் ஆகும். இது, அவனிடம் செய்யும் உத்தம பக்தியினால் கிடைக்கிறது. இந்த பக்தியானது, ஸ்ரீவிஷ்ணுவே சர்வோத்தமன் என்னும் திட ஞானத்தினால் மட்டும் கிடைக்கிறது. ஆகையால், 'ஞானஸ்ய பக்திபாகத்வாத் பக்திர்ஞான மிதீர்யதே' (அனுவியாக்யான) என்று, பக்தியை ஞானத்தினாலேயே பெற்று, ஞானத்தினாலேயே மோட்சம் என்று சொல்வதைப் பார்க்கிறோம். இங்கு ஞானம் என்றால், அபரோக்ஷத்தினால் கிடைத்த உண்மையான விஷ்ணோத்கர்ஷ ஞானம் என்று அர்த்தம். ஸ்ரீவிஷ்ணுப்ரீதி (பிரசாதம், தரிசனம்) 'ப்ரீதிஸ்ச குணோத்கர்ஷஞானதேவ விசேஷதோ த்ருஷ்டா'

(விஷ்ணு தத்வ நிர்ணயம்) அனைத்து குணங்களால் ஸ்ரீவிஷ்ணுவே சிறந்தவன் என்னும் ஞானத்தினாலேயே விசேஷாகாரத்தினால் கிடைக்கிறது என்று பார்க்கிறோம் என்று, ஸ்ரீமதானந்ததீர்த்த பகவத்பாதர், பல்வேறு பிரமாணங் களால் நிர்ணயம் செய்து நிரூபித்திருக்கிறார். ஸ்ருதியும் இவ்வாறே சொல்கிறது.

ந தாவ்ருஷீ ப்ரீதிரீட்யஸ்ய விஷ்ணோர் குணோத்கர்ஷஞாதரி யாத்ருஷீஸ்யாத் ।
தத்ப்ரீணனான் மோக்ஷமாப்னோதி ஸர்வஸ்ததோ வேதாஸ்தத்பரா: ஸர்வ ஏவ ॥

(ஸௌபர்ண ஸ்ருதி). அனைவராலும் வணங்கப்படும் ஸ்ரீவிஷ்ணுவிற்கு, தன் குணோத்கர்ஷ ஞானத்தைக் கொண்டவரில் எத்தகைய அன்பு உண்டாகிறதோ, அத்தகைய அன்பு பிறரில் இருப்பதில்லை. ஸ்ரீவிஷ்ணுவை மகிழ்ச்சிப் படுத்தும் அனைவரும் மோட்சத்தையே அடைகின்றனர். ஆகையால், அனைத்து தேவதைகளும் அவனின் உத்தமத்வத்தையே சொல்கின்றனர் - என்று சொல்கிறது.

சம்சாரம் துக்கங்கள் நிறைந்தது. சாரம் இல்லாதது. விரும்பிய சுகங்கள் இல்லாதது. விரும்பத்தக்க பொருட்களில் சிறந்ததை 'சார' என்கிறோம். சாரம் கிடைத்தால் சுகம் கிடைக்கிறது. ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்னும் ஞானம் (அதனால் கிடைக்கும் அன்பு), அசாரமான சம்சாரத்தில் சாரரூபமானது. பக்தியுடன் செய்யும் ஸ்ரீஹரி ஸ்துதிகளைவிட அதிக புண்ணியங்கள் இல்லை. அதைவிட அதிக சுகம் இல்லை. கடைசியில் மோட்சரூபமான சுகம் கிடைக்கிறது என்பது மட்டுமல்ல. ஸ்ரீஹரியின் குணங்களை கானம் செய்யும் போது கூட (சாதனை காலத்தில் கூட) ஆனந்தத்தைக் கொடுக்கிறது ஸ்ரீஹரி பஜனை.

நின்ன துதிபுதகிந்த புண்ய பேரேனய்ய
நின்னங்க்ரிபஜனெ சுககிந்த । சுககிந்த புருஷார்த்த
இன்னுண்டெ ஸ்வாமி ஜகதொளு ॥
என்கிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

ததேவ புண்யம் ருசிரம் நவம் நவம்
ததேவ ஷஷ்வன்மனஸோ மஹோத்ஸவம் ।
ததேவ ஷோகார்ணவ ஷோஷணம் ந்ருணாம்
யத்ரோத்தமஷ்லோக யஷோனுகீயதே ॥

என்று, ஸ்ரீமத்பாகவதமும் இதையே சொல்கிறது. இப்படியான பிரமேயங்களை தொகுத்து, ஸ்ரீமதாசார்யர், தம் 'ஸ்ரீகிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தில்',

அஸாரே கலு ஸம்ஸாரே ஸாராத் ஸாரதரோ ஹரி: ।
புண்ய ஹீனா ந விந்தந்தி ஸாரங்காஸ்ச யதா ஜலம் ॥

அசாரமான சம்சாரத்தில் ஸ்ரீஹரி ரமாபிரம்மாதி தேவதைகளைவிட சிறந்தவன்; சர்வோத்தமன்; கானல் நீரினை உண்மையான தண்ணீர் என்று நினைத்து, அதனை நோக்கிப் பாயும் மான்கள் எப்படி அதனை நெருங்கியவுடன் உண்மையை அறிந்து, தாகமாகவே இருக்கிறதோ அப்படியே, பாவிகள் ஸ்ரீஹரியை (சர்வோத்க்ருஷ்ட ஞானத்தை, பக்தியை) அடையமாட்டார்கள் - என்கிறார்கள்.

ஸ்ரீவாதிராஜ ஸ்வாமிகள், ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்னும் சாரத்தை ஏற்றுக் கொள்வதற்கு அவசியமான, பக்வமான புண்ணியம் உள்ள சுஜீவர்களை உத்தேசித்து, அந்த அமிர்தத்தை அவருக்கு சுலபமாக கொண்டு கொடுப்பதற்கு, சிறந்ததான இந்த கிரந்தத்தை இயற்றியிருக்கிறார். அனைத்து சஜ்ஜனர்களும் இதனை நன்கு பயன்படுத்திக் கொண்டு, ஸ்ரீஹரியின் அருளுக்கு பாத்திரர் ஆகவேண்டும் என்று

சொல்லி, இந்த திவ்ய கிரந்தத்திற்கு ஸ்ரீவாதிராஜரே எனக்கு அருளி, காட்டிய அர்த்த விவரணையை எழுதி, பக்தபந்துவான ஸ்ரீஹரியிடம் பக்திபூர்வகமாக சமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீஹரிதாசரத்னம் கோபாலதாசர் அவர்கள் தமது 'ஸ்ரீஹரிதாச பாரதி கிரந்த ரத்ன மாலா'வில் இந்த என்னுடைய சிறிய சேவைக்கு ஒரு இடம் கொடுத்து, மிகப்பெரிய உதவியை செய்திருக்கிறார். அவருக்கு என் அனந்த சாஷ்டாங்க நமஸ்காரங்களை சமர்ப்பிக்கிறேன்.

|| ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து ||

1.8.1974
தாவணகெரெ

**ஹரிபக்தசேவகன்**
**பி.பீமராவ், தாவணகெரெ**

# ஸ்ரீவாதிராஜரின் ஹரிசர்வோத்தம ஸார

## மூலம் மட்டும்
## (பாராயணத்திற்காக)

கால தொளெத3வனொப்3ப3 தொளெஸிகொண்ட3வனொப்3ப3
மௌளிய மேலெ ஜலவ த4ரிஸித3வனொப்3ப3
பாலிஸுவ ப்ரபு4வொப்3ப3 கொலுவ தளவாரனொப்3ப3 ।
மூர்லோகவரியெ புட்டிஸித3 பிதனொப்3ப3
ஆலோசனெயல்லி ப3ல்லவரிகெ3 ஸம்ஷயவில்ல
மாலெயன்னு மஹாலகுமி ஹயவத3னகி3த்தளாகி3 ||1

ராவணன கொந்த3 பாபவ களெயபே3கெந்து3
தே3வரகு4பதி ஸதா3ஷிவன பூஜிஸித3 க3ட3
ஆ விதி4ய ஒந்து3 தலெயன்னு கடி3த3 மாத்ரத3லி ।
ஈவாக3 கரத3ல்லிஹ கபாலவ காணனெ
அவரொளு பொரளுவனதா3வாத1ன ப4ஜிபனு
ஜீவரிகெ3 உள்ளஷ்டு ஹயவத3னகி3ல்லவெலெ ||2

ராமாயணத கதெ2யு மஹத்புண்யகதெ2யு க3ட3
ராம ராவணன கொந்த3த்3தெ3 மஹபாப க3ட3
ஆ மனுமுனிக3ளெல்ல பாபகங்கீ3கரிஸித3ரெ ।
ஸ்வாமி ஆலயதி3 பொ3ம்மன மொத3லு கொலிஸனெ
தீ4மந்த ஹயவத3ன கொந்த3 ஹிரண்யக
தாமஸதி3திஜரெல்ல கஷ்யப ரிஷிஸுதரல்லவெ ||3

ஸேதுவெய கண்ட3 நரரிகெ3 பி3ரம்மஹத்ய
பாதக கெடு3வுதெ3ந்து3 ஸ்ருதி மன்னிஸலு
க்2யாதபொ3ம்மன தலெய கடி3யெ கரத3லி கொட்ட ।
ஆ தாப தரித3 ஸுக்ருதி ஸேதுமுக2தி3ந்த3
ஸீதெயரஸனவன ப்ரதிஷ்டிஸி நிலிஸித3 ஜக3
ந்னாத2 ஹயவத3ன ப4க்தர ப3ந்து4 காணிரோ ||4

ஸ்ருதி இவ கர்மணா நோ கனீயனெந்து3
துதிஸுதிரெ நிம்ம நிர்கு3ணபொ3ம்மகெ3 கர்மவுண்டெ
க்ஷிதியொளகெ3 ராவணன வதெ4ய மாடி3த3 ஸேது ।
பதிதபாவனவெனலு அவன கொந்த3வன
பதித பாவனனெம்பு3தே3 உசித யுகுதியு
ஸதத ஸ்ரீஹயவத3னனொப்3ப3னெ ஷுத்3த4 காணிரோ ||5

ஒந்து3 கடெ3யல்லி விபீ4ஷணன ப்ரதிஷ்டிஸித3னு ம
த்தொந்து3 கடெ3யல்லி ஸதா3ஷிவன பூஜிஸித3 இன்
தெந்து3 புராணக3ளு கூகு3திவெ த்ராஸினொளு ।
ஹொந்தி3ஸி ஸமனெந்து3 தூகி3 தோருவந்த3த3லி
ஸந்தே3ஹ ஸல்ல ஹயவத3ன ரகு4பதிகி3ப்3ப3ரு
சந்த3த3 ப4கதரெம்பு3து3 ஸலெ ஸுப்ரஸித்3த4 ||6

ராம ஸ்ரீராம ராமேதி ரமே எம்ப3
ஆ மஹதே3வ ப4கவத் ப4க்தனல்லவேனோ
ஸ்வாமி தன்ன ப்3ருத்யரன்னு ப்ரதிஷ்டிஸித3 நி
ஸ்ஸீமகருணாம்பு3தி3 மஹமஹிமனெம்ப3ரு
ப்4ராமகத3 நுடி3க3ளிகெ3 மருளாக3தி3ருவ ஹயவத3ன
ராமசந்திரனெ காஷிய தாரகபொ3ம்ம காணிரோ ||7

மூலரூபதி3 ஸூரரு த்3வாரகாயாத்ரெயலி
பாலஸாக3ரயாத்ரெ க3ர்ப்ப4யாத்ரெ கேளிய
ஷூலத4ர க2ளக3ஞ்சி பு4வனவெல்லவ ஸ்துதி ।
ஸ்ரீலோலனிஹ வைகுண்ட2யாத்ரெயிந்த3 ப3து3கனெ
பூ4லோகத3லி புட்டி ஹயவத3ன க்ருஷ்ண மாடி3த3
கைலாஸெயாத்ரெ கைவல்யபதிகெ3 லீலெ ||8

யாத்ரெயனு மாடி3ஸிகொண்ட3 ஹர ஹிரியனஹனாகி3 யு
குதி பா3தி4தவாய்து ஹரிஹரரொளைக்ய
சித்ர நின்ன முதகெ நீனெ ஷத்ருவாதெ3 ஜா ।
த்யுத்தரவ பேளெ பராஜயவு பா3ரதி3ஹுதெ3
மத்தெ நெனெயொ ஹயவத3னகி3து3 லீலெயாத3ரெ

ஸ்வத்வ ஹெச்சிது ஹரிஸர்வோத்தமனெம்ப3 ஸ்ருதிகெ3 ||9

வந்த்3யமானம் பிதானம் ப்ரதி ப்ரமாணம்
எந்து3 ருத்3ரன கூடெ3 ஸ்ருதியு பேளிதாகி3
தந்தெ3 மக்கள ப3ளிகெ3 போத3ந்தெ போகி3 மு |
குந்த3 மொம்மனிகெ3 ஹிரியதன கொட3லெந்து3
முந்தெ3 ஜனிஸித3 கி1ரிய குவரரொளு தன்ன
கந்த3ன ஸ்ருஜிஸித3 ஹயவத3ன சதுரனல்லவெ ||10

ரோமகோடி லிங்க3னெந்தெ3னிஸித3 ஹனுமனொந்து3
ரோமகெ கோடிஷிவர மாடு3வ ஷக்த காணிரோ
ஆ மஹாத்மன்ன தன்ன ஆளு மாடி3 நடெ3ஸிகொண்ட |
ராமசந்திரனே ஜக3க்கெ பரதெ3ய்வ காணிரோ
ஸ்வாமிஹயவத3ன வேத3வ தந்து3 கமலஜன
காமிதவனித்தனாகி3 அவனெ ஜக3தொ3டெ3ய ||11

வரவ ஷோதி4பனெந்து3 கர தன்ன ஷிரத3 மேலெ
இரிஸப3ந்த3 க2ளக3ஞ்செ ஹர தன்ன ஸுரேஷ்வரன
அரமனெகெ ஹோகி3 அல்லி பரிஹரவ காணதெ3 நம்ம |
ஸிரியரஸன மொரெஹோக3லு ஹரணவனு பொரெத3 க3ட3
ஷரணரக்ஷகனெம்ப3 பி3ருது3ள்ள ஹயவத3ன
ஹரியல்லதெ3 பிரிதொ3ந்து3 பரதெ3ய்வவில்லவைய்ய ||12

காஷியொளு ராமமந்த்ரோபதே3ஷவ மாள்ப
ஈஷ ஜாணர மட3தி3 ஜக3கெ கு3ருவெந்தெம்ப3
ஆ ஷிவன மந்த்ரதே3வதெ தாரகபொ3ம்மனெனிப |
வாஸுதே3வனெ ஜக3கெ பரதெ3ய்வ காணிரோ
ஈ ஸுதத்வவ பேள்வ ஹரகெ3 நம்ம ஹயவத3ன
ஏஸுமன்னணெய மாடி3த3ருசிதகாணிரோ ||13

ஹரனாரு புராணக3ளு விரஞ்சனாரு புராணக3ளு
ஹரவிரஞ்சரல்லவெந்து3 ஹிரியரெ மன்னிஸலாகி3

பரமஸித்தா3ந்த தோரித3ரெனிப பு3த3ரிகெ3 ।
புராணக3ள மேலெ மாடு3வ பரமாத3ர ஸல்லதெ3ய்ய
து3ராக்3ரஹ மாட3பே3ட3 கு3ருமதவ பி3ட3பே3ட3
ஸிரியரஸ ஹயவத3ன ஆரு புராணக3ள நோடி3 ||14

ஒந்து3 பொ3ம்ம சித்து ஒந்து3 ஜீவ சித்து
எந்து3 ஸ்ருதி ஸ்கந்த4 சேதவெல்ல க்3ரந்தஹாஸ்ய
தி3ந்த3வரிகெ3 ஹரி ஜட3னூ ஹர ஜட3னூ மந்த3ஹாஸ ।
தி3வ்ய ஜட3ரு மனுமுனிக3ளெல்ல
இந்தா2 ஷிவன வஹிஸிகொண்டு3 வாதி3ஸுவரு
ஹிந்து3 முந்த3ரியரெந்து3 ஹயவத3ன நக3னெ ||15

நூறு ருத்3ரர வேளெ கார்யவாத3ரேனவரு
ஈரேளுலோகவனவரு ஸம்ஹரிஸலரியரு க3ட3
கார்யவில்லத3 ஷிவர பேளெ அத்3வைதமத ।
ஹாரிஹோக3தெ3 ப3ரிதெ3 ஹலவு ஹம்ப3லிஸதெ3
ஶ்ரீரமண ஹயவத3னனொட3ம்ப3ட்டரிப்3ப3ரனு
தூ3ர களசித3ரெந்து3 பூர்ணத3வர நம்பு3 ||16

****

**ஸ்ரீபதிர்மானதோ ந: ||**

கிருஷ்ணாய வாசுதேவாய ஹரயே பரமாத்மனே |
ப்ரணதக்லேஷ நாஷாய கோவிந்தாய நமோ நம: ||
ஆசார்ய: பவனோஸ்மாகம் ஆசார்யணீ ச பாரதி |
தேவோ நாராயண:ஸ்ரீஷ: தேவி மங்களதேவதா ||
அப்ரமம் பங்கரஹிதம் அஜடம் விமலம் ஸதா |
ஆனந்ததீர்த்தமதுலம் பஜே தாபத்ரயாபஹம் ||
தபோவித்யா விரக்த்யாதி சத்குணௌ காகரானஹம் |
வாதிராஜ குரூன்வந்தே ஹயக்ரீவ தயாஸ்ரயான் ||
காமதேனுர்யதா பூர்வம் சர்வாபீஷ்ட பலப்ரதா |
ததா கலௌ வாதிராஜ ஸ்ரீபாதோऽபீஷ்டத: ஸதாம் ||
ஓம் நமோ வாதிராஜாய தீர்க்கதாரித்ர்ய காதினே |
ராஜபோக ப்ரதாத்ரே ச நமோஸ்து ஜயதாயினே ||

# ஸ்ரீமத்வாதிராஜ தீர்த்த ஸ்ரீபாதங்களவரால் இயற்றப்பட்ட ஸ்ரீஹரிஸர்வோத்தமஸார

**கால தொளெத$^{3}$வனொப்$^{3}$ப$^{3}$ தொளெஸிகொண்ட$^{3}$வனொப்$^{3}$ப$^{3}$**
**மௌளிய மேலெ ஜலவ த$^{4}$ரிஸித$^{3}$வனொப்$^{3}$ப$^{3}$**
**பாலிஸுவ ப்ரபு$^{4}$வொப்$^{3}$ப$^{3}$ கொலுவ தளவாரனொப்$^{3}$ப$^{3}$ |**
**மூர்லோகவரியெ புட்டிஸித$^{3}$ பிதனொப்$^{3}$ப$^{3}$**
**ஆலோசனெயல்லி ப$^{3}$ல்லவரிகெ$^{3}$ ஸம்ஷயவில்ல**
**மாலெயன்னு மஹாலகுமி ஹயவத$^{3}$னகி$^{3}$த்தளாகி$^{3}$ ||1**

கால - பாதங்களை; தொளெதவனொப்ப - கழுவியவன் (பிரம்மா விஷ்ணு மஹேஷ்வர என்னும் த்ரிமூர்த்திகளில்) ஒருவர் (பிரம்மன்); தொளெஸி கொண்டவனொப்ப - பாதங்களை கழுவிக் கொண்டவன் ஒருவன் (விஷ்ணு); மௌளிய மேலெ - தலை மேல்; ஜலவ - (அந்த கால் கழுவிய)

தண்ணீரை; தரிஸிதவனொப்ப - தாரணை செய்து கொண்டவர் ஒருவர் (மஹேஷ்வர); ஒப்ப - ஒருவர் (விஷ்ணு); பாலிஸுவ - (உலகை) காக்கிறான்; ப்ரபுவு - ஸ்வாமி; ஒப்ப - இன்னொருவர் (ஈஷ்வரன் - ருத்ரர்); கொலுவ - சம்ஹரிக்கும்; தளவாரனு - அதிகாரி; மூர்லோகவு - உலகம் அனைத்தும்; அரியெ - அறிந்ததைப் போல; ஒப்ப - மற்றொருவர் (பிரம்மன்); புட்டிஸித பிதனு - பிறக்க வைத்த தந்தை (படைத்தவர்); ஆலோசனெயல்லி - யோசித்துப் பார்த்தால்; பல்லவரிகெ - அறிந்தவர்களுக்கு; சம்ஷயவில்ல - (இந்த மூவரில் யார் சிறந்தவர் என்னும் விஷயத்தில் சந்தேகமேயில்லை. ஏனென்றால்; மஹாலகுமி - பாற்கடலில் அவதரித்த ஸ்ரீமஹாலக்ஷ்மிதேவி; மாலெயனு - (தான் விரும்புபவர்க்கு போடவேண்டிய) தாமரை மாலையை; ஹயவதனகித்தளாகி - ஸ்ரீவிஷ்ணுவே ஆன ஸ்ரீஹயக்ரீவதேவனுக்கு அர்ப்பித்தாள்.

பிரம்ம விஷ்ணு மஹேஷ்வர என்னும் த்ரிமூர்த்திகள், அனைத்து தேவதைகளைவிட சிறந்தவர்கள் என்பது மக்களின் நம்பிக்கை. இவர்கள் மூவரையுமே தனித்தனியாக சர்வோத்தமர்கள் என்று அறிந்து, ஆராதிக்கும் பரம்பரைகள் இந்தியாவில் உண்டு. இந்த ஆராத்ய தேவதைகளின் சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கதைகளால்கூட இதனை அறியலாம் என்கிறார் ராஜர். த்ரிவிக்ரம அவதாரத்தை எடுத்த ஸ்ரீவிஷ்ணுவின் பாதங்களை, பிரம்மதேவன் தனது கமண்டலத்தில் தண்ணீரினை நிரப்பி, அதனால் கழுவினான். ஸ்ரீவிஷ்ணுவின் பாதங்களைக் கழுவிய நீரே, அடுத்து கங்கையாகி பிரவகித்தாள். அதனை தன் தலையில் ஏந்தி, மஹேஷ்வரன் பரம பவித்ரன் ஆகிறார். பாதங்களை கழுவிக் கொண்டவரே சிறந்தவர் என்பது அனைவரும் அறிந்ததே ஆகும்.

பிரம்மா, விஷ்ணு, மஹேஷ்வர என்னும் மூன்று பகவத் ரூபங்களும் இருக்கின்றன. மூலரூபி ஸ்ரீநாராயணனின்

முதலாம் அவதாரமான வாசுதேவன், தன் மனைவியான மாயா நாமகளனான ஸ்ரீமகாலட்சுமி, சத்வாதி த்ரிகுண நியாமக, ஸ்ரீ பூ துர்கா என்னும் மூன்று ரூபங்களால் தன்னை சேவித்துக் கொண்டிருக்க, அவளில் தானே, ஸ்ரீதேவியில் விஷ்ணு என்றும், பூதேவியில் பிரம்மா என்றும், துர்காதேவியில் மஹேஷ்வர என்றும் அவதரித்தான். பிறகு, பிரம்ம நாமக ரூபம், தாத்விக தேவதைகளின் அம்சங்களையும், அந்த ஸ்ருஷ்டியில் ஸ்தூல தேவதைகளை அடைந்து, சாதனையில் ஈடுபட்டுள்ள ஜீவர்களை விழுங்கி, மஹத் தத்வாபிமானியான பிரம்மதேவனில் பிரவேசம் செய்தான்.

அப்படியே, அஹங்கார தத்வாபிமானியான சிவனில், மஹேஷ்வர நாமக (ருத்ர) ரூபம், நுழைந்தது. விஷ்ணுரூபத்தின் ஆணையால், பிரம்மன் மஹத் தத்வத்தில் நுழைந்தான்.

வர்ஷத்வயே வ்யதிதேத ஸா மாயா த்ரிவிதா பவத் ।
ஸத்வாதிகுணபேதேன ஸ்ரீபூதுர்கேதி நாமிகா ॥
வர்ஷமேகம் தயா ஸம்யகாராதித பதாம்புஜ: ।
வாஸுதேவ: ஸ பகவான் த்ரிதா ஜக்ஞே ஸ்வயம் தத: ॥
ஸ்ரியாம் விஷ்ணுர்புவி பிரம்மா துர்காயாம் ருத்ரஸம்பவ: ।
ததோ பிரம்மாகிலான் ஜீவான் தேவான்ஷானபி ஸர்வஷ: ॥
நிகீர்ய ப்ரவிமேஷாபி மஹத்தத்வதனும் விதிம் ।
அஹங்காராத்மனி ஷிவே ஸா ருத்ரோऽவிஷத் ॥

என்னும் விஷ்ணு ரகஸ்ய வாக்கியங்களின் பொருளே மேற்கண்ட விவரங்களாக உள்ளது.

பிரம்ம மஹேஷ்வரரின் அல்லது ருத்ர நாமக வாசுதேவ ரூபன், தானே ஸ்ருஷ்டி, லயங்களை செய்யாமல், அந்த காரியங்களை பிரம்ம மற்றும் ஈஷ்வரனின் மூலம், அவரில் நிலைத்திருந்து, செய்து, அவர் மூலமாக செய்விக்கிறான்.

பிரம்மாணி ப்ரம்மரூபோஃஸௌ ஷிவரூபி ஷிவே ஸ்தித: |
போன்ற பாகவத வாக்கியங்களில் சொல்லப்பட்ட பிரம்ம மற்றும் சிவ நாமக அந்தர்யாமி ரூபங்களே, விஷ்ணுவிடமிருந்து வேறுபடாத ரூபங்கள் ஆகும்.

அந்த விஷ்ணுவே வாசுதேவ என்னும் ரூபத்தினால் (அவனே ஸ்ரீ நாராயணன்), வேறுபாடு இல்லாதவனாக இருந்து, தானே உலகை கட்டிக் காக்கிறான். இவனே, பத்மனாப ரூபத்தினால், நாபி கமலத்தினால் பிரம்மதேவனின் உத்பத்திக்கும் (தேவதைகள் பற்பல கால விசேஷங்களில், பற்பல ரூபங்களில் பிறக்கின்றனர்) காரணம் ஆகிறான். ஆகையால், சத்யலோகாதிபதியான பிரம்மனும், லய கர்த்தனான ருத்ரனும், விஷ்ணுவும் சமம் அல்ல - அதே சமயத்தில், வேறுபாடு உள்ளவர்களும் அல்ல. அவர்களின் அந்தர்யாமியான தன் நாமக பகவத்ரூபங்கள் மட்டும் விஷ்ணுவிடமிருந்து வேறுபடாதவை.

அமிர்தத்திற்காக, தேவ தைத்யர்கள் பாற்கடலைக் கடைந்தனர். அதிலிருந்து தோன்றிய பல பொருட்களில் ஸ்ரீமகாலட்சுமியும் ஒருவர். இவ்வாறு அவதரித்த லட்சுமியை, தகுதி இல்லாதவர்கள் அனைவரும் விரும்பிய சமயத்தில், தன் கணவனை மட்டுமே தான் அடையப் போவதாக சொல்லி, பற்பல பரிமள புஷ்பங்களால் செய்யப்பட்ட திவ்ய மாலையை கையில் ஏந்தி, தேவதைத்யரின் அந்த கூட்டத்தில், கண்ணெடுத்தும்கூட பார்க்காமல், தேவதைகளில், பிரம்ம ருத்ராதி தேவதைகள் அனைவரும் ஏதோவொரு தோஷங்களைக் கொண்டவர்கள் என்று சொல்லி, அவர்களையும் புறக்கணித்து, தன் உதவியை எவ்விதத்திலும் எதிர்பார்க்காத மற்றும் தன்னை ஆள்வதற்கு சாமர்த்தியம் உள்ள, அனைத்து நற்குணங்களைக் கொண்டவனும், எவ்வித தோஷங்களும் அற்றவனுமான, ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரியே தன் நித்ய நியத பதி என்பதை வெளிப்படுத்தி, ஸ்ரீமுகுந்தனின்

கழுத்தில் மாலையை அர்ப்பித்து, வெட்கத்துடன், அவன் பக்கத்தில் நின்றாள்.

ஏவம் விம்ருஷ்யாவ்யபிஆரி ஸத்குணம் பதம் நிஜைகாஸ்ரயி
ஸத்குணஸ்ரயம் வவ்ரே பரம்ஸர்வ குணைரபேக்ஷிதம் ।
ரமா முகுந்தம் நிரபேக்ஷமீப்ஸிதம் ॥
(பாகவத)

தன் ஆணைப்படியே தோன்றிய, ஜகத்ஜனனியான லட்சுமிதேவிக்கு ஜகத்ஜனகனான ஸ்ரீநாராயணன், அவளின் நியத ஸ்தானமான தன் வக்ஷஸ்தளத்தில் அடைக்கலம் கொடுத்தான்.

ஸ்வஸ்யா: ஸ்த்ரீய ஸ்த்ரிஜகதோ ஜனகோ ஜனன்யா
வக்ஷோ நிவாஸமகரோத்பரமம் விபூதே: ।
ஸ்ரீ: ஸ்வா: ப்ரஜா: ஸகருணேன நிரீக்ஷணேன யத்ர
ஸ்திதைதயத ஸாதிபதேன்ஸ்த்ரிலோகான் ॥
(பாகவத)

ஸ்ரீலட்சுமிதேவி, தன் கிருபா கடாக்ஷத்தை வீசியவாறு, மூன்று உலகத்து பிரஜைகளையும், லோகாதிபதிகளையும் அருளி, அவர்களுக்கு ஏராளமான செல்வங்களை அளித்தாள். இவ்வாறு பாகவதம், ரமா நாராயணரின் மகிமையை சொல்கிறது.

'மாலெயனு மஹாலகுமி ஹயவதனகித்தளாகி' என்றதால் இந்த ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வமும் சொல்லப்பட்டிருக்கிறது. 'யம் காமயே தம் தமுக்ரம் க்ருணோமி தம் பிரம்மாணம்' என்னும் ஸ்ருதி, ஸ்ரீமஹாலக்ஷ்மியின் சக்தி, ஞானாதி சிறப்புகளை நிரூபித்தவாறு, 'எந்த அதிகாரிக்கு பிரம்ம, ருத்ர முதலான பதவிகளை கொடுப்பதற்கு விரும்புகிறேனோ, அவர்களுக்கு அந்த பதவிகளை கொடுக்கிறேன்' என்று சொல்கிறது.

ஸ்ரீமகாலட்சுமியின் அருளை வேண்டியே, பிரம்மாதிகள் ஸ்ருஷ்ட்யாதி ஸ்வகாரியங்களை செய்வதற்கு சமர்த்தராக இருக்கிறார் என்பது அனைத்து ஆகமங்களால் புரிகிறது. ஸ்ரீதேவி, 'அஜித' நாமக ஸ்ரீஹரியின் க்ருபா கடாக்ஷத்தின் பலத்தினால், இவ்வாறான சிறந்த மகிமைகளைக் கொண்டவள் ஆகிறாள். இவளே பாற்கடலிலிருந்து அவதரித்து, தேவ சமூகத்தில் இருந்த 'அஜித' ரூபி ஸ்ரீஹரியை அடைந்ததால், பிரம்மாதி தேவதைகளைவிட அவனே உத்தமன் என்று தெளிவாக புரிகிறது.

விஷ்வஸ்திதி ப்ரளய சர்க்க மஹாவிபூதி
வ்ருத்தி ப்ரகாஷ நியமாவ்ருதி பந்தமோக்ஷா: ।
யஸ்யா அபாங்க லவமாத்ரத ஊர்ஜிதா ஸா
ஸ்ரீயத் கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ॥

ஆஸ்ரித்ய விஷ்வமகிலம் விததாஹி தாதா...
ஆகிய த்வாதஷ ஸ்தோத்திர பத்யங்கள்.

புராணங்களில் சொல்லப்பட்டுள்ள கதைகளின் மூலமாக மட்டுமே ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வம் நமக்கு புரிகிறது என்றல்ல. ஸ்ருதிகளே இந்த நிர்ணயத்தை சந்தேகத்திற்கு இடமின்றி நிரூபித்துள்ளன. 'ஸர்வோத்கர்ஷே தேவதேவச்ய விஷ்ணோர் மஹாதாத்பர்யம் நைவசான்யத்ர ஸத்யம் । அவாதரம் தத்பரத்வம் ததன்யத் ஸர்வாகமானாம் புருஷார்த்தஸ்ததோsத:' என்று (பைங்கி ஸ்ருதி) மற்றும், ' ந தாத்ருஷீ ப்ரீதிரீட்யஸ்ய விஷ்ணோர் குணோத்கர்ஷஞாதரி யாத்ருஷீ ஸ்யாத் । தத்ப்ரீணனான் மோக்ஷமாப்னோதி ஸர்வஸ்ததோ வேதாஸ்தத்வராஸ் ஸர்வ ஏவ' என்று (ஸௌபர்ணா ஸ்ருதி) மற்றும், 'ஸர்வோத்தமம் ஸர்வதோஷ வ்யபேதம் குணைரசேஷை: பூர்ணமன்யம் ஸமன்ஸ்யாத் । வைலக்ஷண்யாத் ஞாபயிதும் ப்ரவ்ருத்தா: ஸர்வே தேவா

முக்யதோ நைவ ஜான்யத்' என்று (மஹோபனிஷத்) கூட சொல்கிறது.

அனைத்து தேவதைகளுக்கும், பிரம்மாதிகளுக்கும் அதிபதியான விஷ்ணுவிற்கு சர்வோத்கர்ஷத்தை சொல்வதே மஹாதாத்பர்யம்; ஸ்ரீவிஷ்ணுவே உத்கர்ஷ குணபூர்ணன் என்று அறிந்தவனிடம் இருக்கும் அன்பு, ஸ்ரீவிஷ்ணுவிற்கு பிறரிடம் இருப்பதில்லை. அவனின் ப்ரீதியினாலேயே அனைவருக்கும் முக்தி கிடைக்கிறது. இந்த காரணத்தால் தேவதைகள் அனைவரும், அவன் சர்வோத்தமன் என்று சொல்வதிலேயே மகிழ்கின்றனர்; மற்றும், தன்னில் வேறுபட்ட மற்ற அனைத்து வஸ்துகளில் நிலைத்திருப்பவன், சர்வோத்தமன், எவ்வித தோஷங்களும் அற்றவன், அனைத்து கல்யாண குணபரிபூர்ணன் ஆனவன் ஸ்ரீஹரி ஒருவனே, என்பதை தெரிவிப்பதற்காகவே, முக்கியமாக அனைத்து தேவதைகளும் செயல்படுகின்றனர். என்பது இந்த உதாரணம் கொடுத்த ஸ்ருதிகளின் அர்த்தமாகும்.

ஸ்ரீமஹாலட்சுமி விரும்பிய 'அஜித'னும் ஸ்ரீஹயவதனனும் ஒருவனே. வேறுபாடு இல்லாதவன். ஸ்ரீஹயக்ரீவன், ஸ்ரீவாதிராஜரின் ஆராத்ய தேவதையும், உபாஸ்ய மூர்த்தியுமான ஸ்ரீஹரிரூபம். வேதங்களை அபகரித்த மதுகைடபர் என்னும் வேத த்ரோகிகளை சம்ஹரித்த ஸ்ரீஹரியின் சாட்சாத் அவதாரம் இது.

தஸ்ம்யை பவான் ஹயஷிரஸ்தனுவம் ச
பிப்ரத் வேத த்ருஹாவதிபலௌ மதுகைடபாக்யௌ ।
ஹத்வாssனயஸ்ரதிகணான்ஸ்து...
(பாகவத)

மற்றும் பிரம்மதேவனின் யக்ஞத்தில், யக்ஞபுருஷனான ஸ்ரீஹரியே, ஹயக்ரீவ ரூபத்தினால் பிரத்யட்சம் ஆனான்.

இந்த ரூபம், தங்கமயமானது. வேதமயம். யக்ஞமயம். ஸர்வதேவதைகளின் ஆத்மா (ஆத்மா = ஸ்வாமி, அந்தர்யாமி); ஹயக்ரீவனின் ஸ்வாசத்திலிருந்து, வேதங்கள் வெளிவந்தன.

ஸத்ரே மமாஸ பகவான் ஹயஷீர்ஷ ஏஷ:
ஸாக்ஷாத்ஸ யக்ஞ புருஷஸ்தபனீயவர்ண: ।
சந்தோமயோ மகமயோऽகிலதேவதாத்மா வாசோ
பபூவுருஷதீ:ஷ்வதோஸ்ய நஸ்த: ॥
(பாகவத)

இந்த ஸ்லோகத்தின் அர்த்தமே இந்த பத்யத்தின் பொருளாக இருக்கிறது.

அனைத்து வேதங்களால் புகழப்படுபவனும், ஞானத்தை அருள்பவனுமாக இருப்பதாலேயே 'ஸ்ரீமத் ஹனுமத்பீம மத்வாந்தர்கத ராமகிருஷ்ண வேதவியாஸாத்மக ஸ்ரீஹயக்ரீவாய நம:' என்று, அனைத்து நற்சாஸ்திர கிரந்தங்களின் துவக்கத்தில், ஸ்ரீஹயக்ரீவ தேவனை வணங்கும் சம்பிரதாயம் நம்மிடையே வந்திருக்கிறது.

**ராவணன கொந்த3 பாபவ களெயபே3கெந்து3**
**தே3வரகு4பதி ஸதா3ஷிவன பூஜிஸித3 க3ட3**
**ஆ விதி4ய ஒந்து3 தலெயன்னு கடி3த3 மாத்ரத3லி ।**
**ஈவாக3 கரத3ல்லிஹ கபாலவ காணனெ**
**அவரொளு பொரளுவனதா3வாத1ன ப4ஜிபனு**
**ஜீவரிகெ3 உள்ளஷ்டு ஹயவத3னகி3ல்லவெலெ ॥2**

ராவணன கொந்த பாபவ - ராவணனைக் கொன்ற பாவத்தை; களெயபேகெந்து - பரிகரித்துக் கொள்ள வேண்டுமென்று; தேவரகுபதி - ஸ்ரீராமசந்திரன்; ஸதாஷிவன - ஈஷ்வரனை; பூஜிஸித கட? - (பிரதிஷ்டை செய்து) பூஜித்தான் என்பாயா? (பூஜித்தான் என்பது அஞ்ஞான உலகம் தெரிந்து

கொள்வதற்காக மட்டுமே); ஆ விதிய - (ஐந்து தலைகள் இருந்த) பஞ்ச முகங்கள் இருந்த அந்த பிரம்மனின்; ஒந்து தலெயன்னு - ஒரு தலையை; கடித மாத்ரதலி - கத்தரித்த சமயத்தில்; ஈவாக - இப்போதும்கூட; கரதல்லிஹ - (தன்) கைகளில் விடாமல் பிடித்திருக்கும்; கபாலவ - (அந்த கத்தரித்த) தலையை; சிப்பன்னு - மண்டையோட்டினை; காணனெ - (சிவன்) தன் கையில் இருக்கிறதல்லவா?; ஆவரொளு - யாரில்; பொரளுவனு - வேண்டிக் கொள்வானோ (பாப பரிகாரத்திற்காக விழுந்து வணங்குவானோ); அதாவாதன பஜிபனு - இப்படியாக வேண்டிக் கொள்ளும் யாரையும், யாரும் பூஜிப்பாரா?; ஜீவரிகெ உள்ளஷ்டு - ஜீவர்கள் இருக்கும்வரை; தோஷஸ்பர்ஷவு ஹயவதனகெ - (ஸ்வதந்த்ரனான) ஸ்ரீஹயக்ரீவ ஸ்வாமிக்கு; இல்லவெலெ - இல்லவே இல்லை; திளியோ, ஹே அக்ஞ ! எலெ - ஹே மூர்க்கனே; ஹயவதனகெ - ஸ்ரீஹரிகெ; இல்லவெ - இருப்பதில்லையா? (ஸ்ரீஹரியின் சாமர்த்தியம் எல்லையற்றது - அபாரமானது; எந்த பாவமும் அவனிடம் வருவதில்லை).

ராவணன் புலஸ்த்ய பிராமணனின் குலத்தில் பிறந்தவன். பிறவியால் பிராமணன். இவனைக் கொன்றதால், ஸ்ரீராமனுக்கு பிரம்மஹத்யா தோஷம் வந்தது என்றும், அதன் பரிகாரத்திற்காக ராமேஸ்வரத்தில், கடற்கரையில் ஈஷ்வர லிங்கத்தை பிரதிஷ்டை செய்து, பூஜித்தான் என்றும் அஞ்ஞானிகள், மோகனத்திற்காக எழுதப்பட்ட தாமஸ புராண வாக்கியங்களைப் படித்து மயங்குவர். வருண தேவனின் பிரார்த்தனைக்கேற்ப, ஸ்ரீராமன் கடலுக்கு சேதுபந்தனம் செய்வித்து, கபி சைன்யத்துடன் இலங்கையை அடைந்து, போரில் ராவணாதிகளை கொன்றான். ஸ்ரீராமனின் அதிஅற்புதமான இந்த சேதுபந்தன காரியம், அவனின் புகழை பூலோகத்தில் நிரந்தரமாக நிறுத்தி, தேவாதி பக்தர்களுக்கு, தன் தரிசனத்தால் பிரம்மஹத்யாதி பரிகாரம் ஆகாத மகா தோஷங்களைக்கூட பரிகரிக்கிறது.

ஸேதும் த்ருஷ்ட்வா பிரம்மஹத்யாவ்யபோஹதி - ஆகிய ஸ்ருதி வாக்கியங்கள், சேது தர்ஷனத்தின் மகிமையை சொல்கின்றன. ஶ்ரீராமனுக்கு ராவணனைக் கொன்றதால் பிரம்மஹத்யா பாவம் உண்டாகும் என்பது எப்போதும் சரியல்ல என்பதில்; ஶ்ரீராமனால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்னும் ஈஷ்வரனின் ஸ்ருதி பிரசித்தமான தோஷத்தை உதாரணம் காட்டி, ஶ்ரீராமசந்திரன் தானே அந்த லிங்கத்தை பூஜித்து, பிரம்மஹத்யா பாவத்தினால் தன்னை விமோசனம் செய்து கொண்டான் என்பது பொருந்துவதில்லை என்னும் செய்தியையும்; இங்கு நிரூபித்திருக்கிறார் என்று அறிய வேண்டும்.

சதுர்முக பிரம்மதேவருக்கு முதலில் ஐந்து தலைகள் இருந்தன. அவற்றில் ஒன்றினை ருத்ரர், ஶ்ரீவிஷ்ணுவின் ஆணையின் பேரில் கத்தரித்தார். 'அஹம் ருத்ராய தனுராதனோமி பிரம்மத்விஷே ஷரவே ஹந்த வா உ'. அம்ப்ரிணி சூக்தம் முதலான ஸ்ருதி வாக்கியங்களில் இந்த விஷயம் வருகிறது. கத்தரிக்கப்பட்ட அந்த பிரம்ம தலையில் கபாலம், சிவனின் கைக்கு வந்து, பிரம்மஹத்யையினால் சிக்கிக்கொண்டு, அதன் பரிகாரத்திற்காக சிவன், ஶ்ரீவிஷ்ணுவை பிரார்த்தித்து (அவிமுக்த நாமக) காசி க்ஷேத்திரத்திற்கு சென்றான் என்னும் கதை, கூர்ம புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

சிவன் ஒரு அம்சத்தினால் 'சேது' தரிசனத்தை நிரந்தரமாக பெற்றவாறு, பிரம்மஹத்யா பாவ பரிகாரம் என்னும் அந்த தரிசனத்தின் மகிமையை காட்டுவதற்காக நின்று, பிரம்மஹத்யையினால் காப்பாற்றப்பட்டான். அதைப் போலவே, ஶ்ரீராமன், அங்கு ஈஷ்வர லிங்கத்தை நிறுவினான் என்று சொல்லும் பிற புராண வாக்கியங்களை இங்கு குறிப்பிட்டு, இந்த இரு கதைகளால் தெரியப்படும் விஷயத்தை இந்த பத்யத்தில் விளக்கியுள்ளார்.

தனக்கு வந்த பிரம்மஹத்யையால் காப்பாற்றப்பட, ஸ்ரீவிஷ்ணுவின் பாதத்தில் விழுந்து புரண்டார் சிவன். ஸ்ரீவிஷ்ணுவின் சாட்சாத் அவதாரமானவர் ஸ்ரீராமன். சிவன், துக்காதி தோஷலேபம் உள்ள ஜீவ சமுதாயத்தைச் சேர்ந்த ஜீவன். ஸ்ரீராமன், என்றும் தோஷத்தின் ஸ்பர்ஷமே இல்லாத நித்யானந்த ஸ்வரூபனான ஸ்வதந்த்ரன் - விஷ்ணுவே ஆவார். இப்படியிருக்கையில், ஸ்ரீராமன் சிவனை பிரதிஷ்டை செய்து பூஜித்தார் என்பவர்களின் சிந்தனையை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும் என்று கேட்டு, ஸ்ரீராமனே சர்வோத்தமனான பரமாத்மன் என்னும் நிர்ணயத்தை இங்கு தெளிவு படுத்தியிருக்கிறார்.

**ராமாயணத கதெ$^{2}$யு மஹத்புண்யகதெ$^{2}$யு க$^{3}$ட$^{3}$**
**ராம ராவணன கொந்த$^{3}$த்$^{3}$தெ$^{3}$ மஹபாப க$^{3}$ட$^{3}$**
**ஆ மனுமுனிக$^{3}$ளெல்ல பாபகங்கீ$^{3}$கரிஸித$^{3}$ரெ ।**
**ஸ்வாமி ஆலயதி$^{3}$ பொ$^{3}$ம்மன மொத$^{3}$லு கொலிஸனெ**
**தீ$^{4}$மந்த ஹயவத$^{3}$ன கொந்த$^{3}$ ஹிரண்யக**
**தாமஸதி$^{3}$திஜரெல்ல கஷ்யப ரிஷிஸுதரல்லவெ** ॥3

ராமாயணத கதெயு - ராமாயணத்தின் கதை; மஹத்புண்ய கதெயு கட - (அவற்றைக் கேட்பதால்) மிகப்பெரிய புண்ணியத்தை தரக்கூடிய கதை என்பது ஞானிகளால் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயமாகும். இப்படி இருக்கையில், ராம - ஸ்ரீராமன், ராவணன கொந்தத்தெ - (துஷ்ட) ராவணனை கொன்றது என்பது; மஹாபாப கட - மஹா பாவம் என்று எப்படி சொல்வாய்?; ஆ மனுமுனிகளெல்ல - (தர்ம சாஸ்திரங்களை அறிந்தவர்களான) மனுவு (மன்வந்தராதிபதி) தர்மஞானிகளான ரிஷிகள் அனைவரும்; பாபகெ - (ஸ்ரீராமன் ராவணனைக் கொன்றது) பாவம் என்று; அங்கீகரிஸிதரெ - ஒப்புக்கொண்டால்; ஸ்வாமி - ஸ்ரீவிஷ்ணுவே; பொம்மன - பிரம்மதேவனை; மொதலு - முன்பு; ஆலயதி - தன் ஸ்தானத்தில்; கொலிஸனெ - கொல்லவில்லையா? ((ருத்ரனால்

பிரம்மனின் தலையை கத்தரிக்கவில்லையா?. இது பாவம் அல்லவா? ; தீமந்த ஹயவதன - சர்வக்ஞனான ஸ்ரீஹயக்ரீவன் (நரசிம்ம ரூபனாகி); கொந்த - கொன்றான்; ஹிரண்யக - (துஷ்ட தைத்யனான) ஹிரண்யகசிபு; மற்றும் தாமஸதிதிஜரெல்ல - தமோ யோக்யரான திதி புத்ரரான தைத்யர்கள் அனைவரும் (ஸ்ரீநரசிம்மனே அந்த காலத்தில் அனைத்து தைத்யர்களையும் கொன்றான்); கஷ்யபரிஷி ஸுதரல்லவெ - அவர்கள் கஷ்யப ரிஷிகளின் மக்கள் அல்லவா? (பிராமணரான கஷ்யபரின் மக்கள் ஆகையால், அது பிரம்மஹத்யா ஆகவில்லையா?).

ராவண சம்ஹாரத்தினால் ராமனுக்கு பிரம்மஹத்யா பாவம் வரவில்லை என்பதை வெவ்வேறு உதாரணங்களால் நிரூபிக்கிறார். ஸ்ரீராமன், பிரம்மஹத்யையைப் பெற்று பாபியாகிருந்தால், ராமாயணம் புண்ணிய கதையாக இருந்திருக்காது. ஞானிகள் இதனை புண்ணிய கதை என்று அறிந்து, இதனை தொடர்ந்து கேட்டு வந்திருக்க மாட்டார்கள். ஸ்ரீராமனைப் போல, ஸ்ரீநரசிம்மனும் ஸ்ரீவிஷ்ணுவின் அவதாரமே. அவன் கஷ்யபரின் மக்களான (அவரின் மனைவி திதிதேவியிடம் பிறந்த) ஹிரண்யகசிபு ஆகிய தைத்யர்களை சம்ஹரித்த காரணம், அவனும் பாபியாக வேண்டியிருந்தது.

இவ்வளவு ஏன்? ருத்ரரிடம் சொல்லி, அவர் மூலமாக பிரம்மனின் தலையை கத்தரித்தான். அதற்காக விஷ்ணுவும் அந்த பாவத்தில் பங்கு வகிக்க வேண்டுமல்லவா? உலகத்தை துன்புறுத்தக்கூடிய, துஷ்ட தைத்யர்களின் சம்ஹாரத்தை, அந்த துஷ்டர்கள், பிராமண குலத்தில் பிறந்தனர் என்பதற்காக மட்டும், மன்வாதி ரிஷிகள் அதனை பாவம் என்று ஒப்புக்கொள்வதில்லை.

(வ்ருத்ரம் ஹத்வா இந்த்ரோ மஹனாஸ: என்று (ஸ்ருதி) பிராமணனாக பிறந்த வ்ருத்ராசுரனைக் கொன்று, அதிசய

மஹிமாவந்தனாக இந்திரன் ஒளிர்ந்தான் என்றே சொல்கிறது. வ்ருத்ரனின் வதைக்குப் பிறகு இந்திரன் செய்த அஷ்வமேத யாகம், அவனது பாவ பரிகாரத்திற்காக அல்லவே அல்ல).

அப்படி ஒப்புக் கொண்டால், ராமனைப் போல நரசிம்மனும், விஷ்ணுவும் பாவிகள் ஆகவேண்டியிருக்கிறது. எவ்வித தோஷங்களும் அற்றவனான ஸ்ரீஹரியை பாவி என்று அறிவதைவிட தவறான ஞானம் வேறு இல்லை. அப்படி மித்யாஞானம் வந்தால், நித்ய துக்க ஸ்தானமான அந்தம் தமஸ்ஸில் வீழ்வதே அதன் பலனாகும்.

பாவ புண்ணியங்களை தர்ம சாஸ்திரங்கள் நிர்ணயிக்கின்றன. மன்வந்தராதிபதியான 'மனு' தர்மசாஸ்திரங்களை இயற்றியவன். அதனை விவரித்து, விளக்கி, நிரூபிக்கிறார் - பராசராதி ரிஷிகள்.

**ஸேதுவெய கண்ட$^{3}$ நரரிகெ$^{3}$ பி$^{3}$ரம்மஹத்ய**
**பாதக கெடு$^{3}$வுதெ$^{3}$ந்து$^{3}$ ஸ்ருதி மன்னிஸலு**
**க்$^{2}$யாதபொ$^{3}$ம்மன தலெய கடி$^{3}$யெ கரத$^{3}$லி கொட்ட |**
**ஆ தாப தரித$^{3}$ ஸுக்ருதி ஸேதுமுக$^{2}$தி$^{3}$ந்த$^{3}$**
**ஸீதெயரஸனவன ப்ரதிஷ்டிஸி நிலிஸித$^{3}$ ஜக$^{3}$**
**ந்னாத$^{2}$ ஹயவத$^{3}$ன ப$^{4}$க்தர ப$^{3}$ந்து$^{4}$ காணிரோ ||4**

ஸேதுவெய கண்ட - (ராவணனின் சம்ஹாரத்திற்காக இலங்கைக்கு போவதற்கு ஸ்ரீராமன் கடலில் கட்டிய) சேதுவை தரிசனம் செய்த (அதாவது, ஸ்ரீராமனின் சேதுபந்தனத்தின் மஹிமாஞானத்துடன் பக்தியுடன் பார்க்கும்); நரரிகெ - மனிதர்களுக்கு; பிரம்மஹத்யபாதக கெடுவுதெந்து - பிரம்மஹத்யா பாவம் களையும் என்று; ஸ்ருதி - ஸ்ருதிகள்; மன்னிஸலு - ஒப்புக் கொண்டிருப்பதால் (இந்த விஷயத்தில் மிகச்சிறந்த பிரமாணங்களான ஸ்ருதிகளைவிட அதிகமான பிரமாணங்கள் இல்லை ஆகையால் மற்றும் தேவையற்றது

என்பதால்); க்யாதபொம்மன - (ஸ்ருஷ்டி கர்த்தனான) பிரம்மதேவனின்; தலெய கடியெ - ((ருத்ரர்) தலையை கத்தரிக்க; கரதலி தொட்ட - கையில் தரித்த (விடாமல் பிடித்திருக்கும்) அந்த தலையின் கபாலம் மற்றும் பிரம்மஹத்யா பாவங்களால் ஆன; ஆ தாப - துக்கத்தை; தரித - பரிகரித்த (போக்கிய); ஸுக்ருதி - நற்செயல்களையே செய்யும்; ஸீதெயரஸனு - சீதாபதியான ஸ்ரீராமசந்திரன்; ஸேதுமுகதிந்த - சேதுவின் எதிரில் நின்று தரிசனம் செய்யுமாறு; அவன - ருத்ரனை (சிவலிங்கத்தை); ப்ரதிஷ்டிஸி - (விதிப்படி) பிரதிஷ்டை செய்து; நிலிஸித - ஸ்தாபித்தான் (நிரந்தர சேது தரிசனத்தால் அந்த பாவம் வரக்கூடாதென்று அங்கு நிறுவினான்); (இவ்வாறு ஸ்தாபித்த) ஜகன்னாத ஹயவதன - உலக நாயகனான ஸ்ரீஹரி; பக்தர பந்து காணிரோ - பக்தர்களை (தாய் தந்தை மக்கள் ஆகியோரைப் போல) காக்கும் உறவினர் என்று அறிந்துகொள்.

ருத்ரர் விஷ்ணுபக்தர்களின் முதல்வன். (அனாதி காலத்திலிருந்து) இருக்கும் விஷ்ணு பக்தியைக் கொண்டவராக, துக்காதி தோஷங்கள் அற்றவரான வாயு பிரம்மாதி ருஜுகண ஜீவர்களைத் தவிர, பிற ஜீவர்களின் நடுவில், ருத்ரதேவர், விஷ்ணு பக்தர்களில் முதல்மையானவன்).

பவாய நஸ்த்வம்பவ விஷ்வபாவன த்வமேவ மாதாத்ம ஸுஹ்ருத்பதி:பிதா ।
த்வ ஸத்குருர் நபரமம் ச தெய்வதம் யஸ்யானு வ்ருத்யா க்ருதினோ பபூவிம ॥ (பாகவதம்)

நம் அனைவருக்கும் நீயே தாய், தந்தை, நண்பன், பிரபு என அனைத்தும் ஆகியிருக்கிறாய். சத்குருவும் பரதேவதையும் நீயே. உன்னை வணங்கி தன்யர் ஆகிறோம்; என்றும்;

ந மே பக்த: ப்ரணஷ்யதி; தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் - ஆகிய கீதா வாக்கியங்களில்; ஸ்ரீகிருஷ்ண பக்தர்கள், எந்த விதமான துக்கங்களையும் பெறுவதில்லை என்றும், ஸ்ரீகிருஷ்ணனே தன் பக்தர்களின் யோக க்ஷேமங்களை பார்த்துக் கொள்ளுகிறான் என்றும், ஆணித்தரமாக கூறப்பட்டுள்ளது. ஸ்ரீஹரி, பக்தபந்து என்பதை, ஞானிகளான ஹரிதாசர்கள் அனேகர் 'தந்தெ தாயியு ப்ராத்ரு பந்து சககுருபுத்ர எந்தெந்து நீனே கதிகோத்ர' என பாடியிருக்கின்றனர்.

**ஸ்ருதி இவ கர்மணா நோ கனீயனெந்து$^{3}$**
**துதிஸுதிரெ நிம்ம நிர்கு$^{3}$ணபொ$^{3}$ம்மகெ$^{3}$ கர்மவுண்டெ**
**க்ஷிதியொளகெ$^{3}$ ராவணன வதெ$^{4}$ய மாடி$^{3}$த$^{3}$ ஸேது ।**
**பதிதபாவனவெனலு அவன கொந்த$^{3}$வன**
**பதித பாவனனெம்பு$^{3}$தே$^{3}$ உசித யுகுதியு**
**ஸதத ஸ்ரீஹயவத$^{3}$னனொப்$^{3}$ப$^{3}$னெ ஷுத்$^{3}$த$^{4}$ காணிரோ** ||5

ஸ்ருதியு - வேதங்கள்; இவ - ஸ்ரீஹரி (பரமாத்மன்); கர்மணா நோ கனீயனெந்து - 'ந கர்மணா வர்த்ததே நோகனீயான்' என்றபோது; துதிஸுதிரெ - (அவனின் மகிமையை) துதித்தபோது; நிம்ம - உங்களின் சித்தாந்தத்தின் (மாயாவாத); நிர்குண பொம்மகெ - நிர்குண பிரம்மனுக்கு (ஞான இச்சா கர்த்ருத்வாதி எந்த தர்மங்களும் இல்லாத நிர்விசேஷ வஸ்துவான பிரம்மனுக்கு); கர்மவுண்டெ - (ஸ்ருஷ்டி சம்ஹாரம் முதலான) கர்மங்களாவது இருக்கிறதா? ; க்ஷிதியொளகெ - உலகில்; ராவணர வதெய மாடித - ராவணனைக் கொன்ற (அதற்குக் காரணமான), சேது - சேது பாலம்; அல்லது ஸ்ரீராமனால் நிறுவப்பட்ட சேது பாலம்); பதிதபாவனவெனலு - பாவிகளை பவித்ரம் ஆக்குகிறது என்று ('ஸேதும் த்ருஷ்ட்வா பிரம்மஹத்யா வ்யபோஹதி' ஆகிய ஸ்ருதிகள்) சொல்லும்போது; அவன கொந்தவன - ராவணனைக் கொன்றவனையே (ஸ்ரீராமனையே);

பதிதபாவனனெம்புதே - பதிதர்களை (பாவம் செய்தவர்களை) சுத்தமானவர்களாக செய்கிறான் என்பதே; உசித யுகுதியு - அதிக தக்க (அங்கீகரிப்பதற்கு அதிக தகுதியுள்ள) விஷயம்; ஸ்ரீஹயவதனனொப்பனே - ஸ்ரீஹரி ஒருவனே; ஸதத ஷுத்த காணிரோ - நித்ய ஷுத்த (என்றும் பாபாதி எந்த தோஷங்களும் இல்லாத) ஸ்வரூபன் என்று அறியுங்கள்.

ஸ்ரீஹரி, ஜகத் சம்பந்தமான ஸ்ருஷ்டி சம்ஹாராதி அனைத்து கர்மங்களையும் செய்கிறான். ஆனால், நித்யபரிபூர்ணனான ஸ்ரீஹரிக்கு, கர்மங்களால் (அல்லது வேறு எந்த காரணங்களாலும்) வளர்ச்சி, குறைபாடு ஆகிய மாற்றங்கள் என்றும் இல்லை. இப்படியான ஸ்ரீஹரியின் மகிமையை, 'ந கர்மணா வர்ததே நோ கனீயான்', 'ஏஷ நித்யோமஹிமா பிராமணஸ்ய', 'பராஸ்ய ஷக்திர்விவிதைவ ஷ்ரூயதே ஸ்வாபாவிகீ ஞானபலக்ரியா ச' என்னும் ஸ்ருதிகள் சொல்கின்றன.

ஸ்ரீஹரியின் ஞானபல க்ரியாதிகள் மற்றும் மகிமைகள், ஸ்வாபாவிகமான ஸ்வரூப தர்மங்களே ஆகியிருக்கும்போது ராவண வதையினால் ஸ்ரீராமனுக்கு செயலை செய்த தோஷ லேபம் வருமா? அல்பரான ஜீவர்களுக்கும்கூட, அபரோக்ஷ ஞானோத்தர காலத்தில் கர்மங்கள் இல்லையென்று ஸ்ருதிகளே சொல்கின்றன. பூர்வோக்த ஸ்ருதிகள் பரபிரம்மன், வளர்ச்சி, குறைபாடு ஆகியவை இல்லாத நித்யஞான க்ரியாதி தர்ம ஸ்வரூபன் என்று சொல்ல, கர்த்ருவ்யாதி எந்த தர்மங்களும் இல்லாத நிர்விசேஷ வஸ்து என்று 'நிர்குண பிரம்ம'னை சொல்லும் 'மாயாவாத' மதத்தைப் போல, பரபிரம்மனால் வேறுபடாத ஸ்ரீராமனுக்கு ராவண வதம் என்னும் கர்மமே இல்லை; ஆகையால், எந்த பாவமும் இல்லை; அதன் பரிகாரத்திற்காக சிவனை ஸ்தாபனை செய்து பூஜிக்கவும் இல்லை.

சேதுதரிசனமே மஹாபாவங்களை பரிகரிக்கிறது என்று ஸ்ருதி பிரமாணங்கள் இருக்கையில், ஸ்ரீராமன் ஸ்வயம் பதிதபாவனன் என்று சொல்லவும் வேண்டுமா? ஸ்வயம் பாவங்களை செய்தவர்களை பவித்ரமாக ஆக்குபவனுக்கு, பிரம்மஹத்யா பாவங்கள் அண்டுமா? அதன் பரிகாரத்திற்காக சிவலிங்கத்தின் ஸ்தாபனம் மற்றும் பூஜையா? இந்த பத்யத்தால், ஸ்ரீராமன், நித்யஷுத்த ஸ்வரூபன் என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீஹயக்ரீவனே ஸ்ரீராமன், வேதோக்த பரபிரம்மனும் அவனே என்பது முந்தைய பத்யங்களில் விளக்கப்பட்டுள்ளது.

**ஒந்து3 கடெ3யல்லி விபீ4ஷணன ப்ரதிஷ்டிஸித3னு ம**
**த்தொந்து3 கடெ3யல்லி ஸதா3ஷிவன பூஜிஸித3 இன்**
**தெந்து3 புராணக3ளு கூகு3திவெ த்ராஸினொளு ।**
**ஹொந்தி3ஸி ஸமனெந்து3 தூகி3 தோருவந்த3த3லி**
**ஸந்தே3ஹ ஸல்ல ஹயவத3ன ரகு4பதிகி3ப்3ப3ரு**
**சந்த3த3 ப4கதரெம்பு3து3 ஸலெ ஸுப்ரஸித்3த4** ||6

ஒந்து கடெயல்லி - ஒரு பிரதேசத்தில்; விபீஷண - விபீஷணனை; பிரதிஷ்டிஸிதனு - (ஸ்ரீராமன்) பிரதிஷ்டை செய்தான்; மத்தொந்து கடெயல்லி - வேறொரு இடத்தில் (அதே கடற்கரையில்); இன்னொரு இடத்தில்; ஸதாஷிவன - சிவனை; பூஜிஸித - (ஸ்ரீராமன்) ஸ்தாபித்து பூஜித்தான்; இந்தெந்து - இப்படி இருக்கையில்; புராணங்கள் - புராண வாக்கியங்கள்; கூகுதிவெ - சொல்கின்றன; த்ராசினொளு - தராசில்; ஹொந்திஸி - (ஒவ்வொரு தட்டில் ஒவ்வொன்றினை); இட்டு - (விபீஷண மற்றும் சதாசிவனின் பிரதிஷ்டாபனைகளை) வைத்து; தூகி - ஒப்பிட்டு; ஸமனெந்து - இந்த இரண்டும் சமம் என்று; தோருவந்ததலி - சொல்வது போல இருக்கிறது (இரண்டினையும் ஸ்தாபனை செய்து பூஜித்தார்). ஹயவதன ரகுபதிகெ - ஸ்ரீஹயக்ரீவாபின்ன ஸ்ரீராமதேவனுக்கு; இப்பரு - விபீஷண மற்றும் ஸதாஷிவ இருவரும்; சந்தத பகதரெம்புது - ஏகாந்த பக்தர்கள் என்பது;

ஸலெ ஸுப்ரஸித்த - (ராமாயணத்திலும் கூட) சொல்லப்பட்டிருக்கிறது; ஸந்தேஹ ஸல்ல - (ஆகையால், விபீஷணனை பாப பரிகாரத்திற்காக ஸ்ரீராமன் பூஜிக்கவில்லை என்பது நிரூபிக்கப்பட்டிருப்பதைப் போல), சதாசிவனையும் பிரம்மஹத்யா பரிகாரத்திற்காக பூஜிக்கவில்லை என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

விபீஷணன் மற்றும் சதாசிவரில் தாரதம்யத்தில் அதிக வேறுபாடு உள்ளது. சரஸ்வதி பாரதிதேவியரின் அடுத்த வகுப்பில் ருத்ரதேவர் இருந்தால், மிகவும் கீழான கர்மஜ தேவதைகளின் வகுப்பில் விபீஷணன் இருக்கிறார். இப்படியிருந்தாலும், இவர்கள் இருவரும் ஸ்ரீஹரி பக்தர்கள் என்னும் ஒற்றுமை இருக்கிறது. இருவரின் பிரதிமைகளை, ஸ்ரீராமன் வெவ்வேறு இடங்களில் ஸ்தாபனை செய்து, இந்த ஒற்றுமையை வெளிப்படுத்தினான் என்றும், பிரதிஷ்டை செய்து பூஜித்தது, உலகத்திற்கு கற்றுக் கொடுப்பதற்காக (மற்றவர்கள் ஹரிபக்தர்களை பூஜித்து, அவரின் அருளை சம்பாதிக்கும் வழியைக் காட்டுவதற்காக) மட்டுமல்லாமல், தான் அவர்களின் அருளைப் பெறுவதற்காக இல்லை என்றும், குறிப்பால் உணர்த்தப்பட்டிருக்கிறது.

எப்படியென்றால், ஸ்ரீராமன் சதாசிவனை பூஜித்து, பிரம்மஹத்யா பாவத்தை பரிகரித்துக் கொண்டான் என்னும் தவறான வாக்கியத்தைப் போல, விபீஷணனையும் பிரதிஷ்டை செய்தது பாப பரிகாரத்திற்காக என்னும் சரியான வாக்கியமும் இல்லை. ஆகையால், 'ஸேதுதர்ஷனதிந்த பாபபரிஹார' என்னும் ஸ்ருதி வாக்கியத்தால் விளக்கிய விஷயத்தைப் பார்த்தால் 'ஸ்ரீராமன் சதாசிவனை அர்ச்சித்தது, பாப பரிகாரத்திற்காக அல்ல, விபீஷணனை ஸ்தாபித்து பூஜித்ததைப் போல' என்னும் ஸ்ருதி வாக்கியத்திற்கேற்ப கண்டிப்பாக ஒப்புக்கொள்ள வேண்டியதே ஆகும் என்று புரிகிறது.

**ராம ஸ்ரீராம ராமேதி ரமே எம்ப$^3$**
**ஆ மஹதே$^3$வ ப$^4$கவத் ப$^4$க்தனல்லவேனோ**
**ஸ்வாமி தன்ன ப்$^3$ருத்யரன்னு ப்ரதிஷ்டிஸித$^3$ நி**
**ஸ்ஸீமகருணாம்பு$^3$தி$^3$ மஹமஹிமனெம்ப$^3$ரு**
**ப்$^4$ராமகத$^3$ நுடி$^3$க$^3$ளிகெ$^3$ மருளாக$^3$தி$^3$ருவ ஹயவத$^3$ன**
**ராமசந்திரனெ காஷிய தாரகபொ$^3$ம்ம காணிரோ ||7**

ராம ஸ்ரீராம ராமேதி - ஹே ராமசந்திர, ஸ்ரீராம, ராம என்று; ரமே (ராம நாமத்தை ஜெபிப்பதாலேயே) வாழ்கிறேன் (விஹரிஸுத்தேனே - மகிழ்கிறேன்); எம்ப - என்று சொல்லும்; ஆ மஹதேவ - (ராம நாமத்தின் மகிமையை அறிந்த) அந்த மகாதேவன்; பகவத் பக்தனல்லவேனோ - ஸ்ரீராமனின் (பகவந்தனின்) பக்தன் அல்லவா? (ஸ்ரீராமபக்தன் என்பதற்கு வேறு என்ன ஆதாரம் வேண்டும்?); ஸ்வாமி - பிரபு (ஸ்ரீராமன்); தன் ப்ருத்யரன்னு - தன் பக்தர்களை (விபீஷண மற்றும் சிவனை); ப்ரதிஷ்டிஸித - ப்ரதிஷ்டை செய்த (ஸ்தாபனை செய்து, உலகத்தால் வணங்கப்பட வேண்டியவர் என்று காட்டிய); நிஸ்ஸீமகருணாம்புதி - அபாரமான கருணைக் கடலான; மஹமஹிமனெம்புது - மஹாமஹிம உள்ளவன் என்று (ஞானிகள்) சொல்வர்; ப்ராமக நுடிகளிகெ - ப்ரமை கொடுக்கும் (அஞ்ஞானிகளின்) பேச்சுகளுக்கு; மருளாகதிரு - மயங்காமல் இரு; ஹயவதனராமசந்த்ரனே - ஸ்ரீஹயக்ரீவாபின்ன ராமசந்திரனே; காஷிய - காசி க்ஷேத்திரத்தின் (காசியில் மகாதேவர் எப்போதும் வசிப்பவர் ஆகிறார்); தாரக பிரம்மனெந்து - (அனைவரின் சம்சாரத்தை தாண்டச் செய்யும் பரபிரம்மன் என்று) அறியுங்கள்.

(ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே । சஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வரானனே ||. இந்த புராண வாக்கியம் இங்கு சொல்லப்பட்டிருக்கிறது. இதன் பொருள் இவ்வாறு உள்ளது. ஹே மனோரமையே, கிரிஜையே, ஸ்ரீராம ராம ராம என்று ஜெபித்தவாறு (அந்த திவ்ய மந்திர பிரதிபாத்யனான)

ஸ்ரீராமனிடம் (ரமே) மகிழ்கிறேன். ஹே வரானனே. ராம நாமம் விஷ்ணு சஹஸ்ர நாம துல்யமானது. ஸ்ரீவிஷ்ணு சஹஸ்ர நாமத்தை முழுமையாக படித்த பலனானது, ஒரு முறை 'ராம' என்னும் இரு எழுத்தினை சொல்வதாலேயே வருகிறது).

ராம என்னும் இரு எழுத்துக்களின் இந்த திவ்ய நாமம், சர்வாபீஷ்டங்களை பெற்றுக் கொடுக்கும் மந்திரம் ஆகும். இதனை பக்தியுடன் ஜெபிப்பதால் நற்பலன்கள் கிடைப்பதால், இது 'தாரக மந்திரம்' என்றே அழைக்கப்படுகிறது. இந்த மந்திர ஜபத்தின் முக்கிய அதிகாரி சிவன். இந்த ஜபத்தினாலேயே 'மஹாதேவ' என்னும் காரணப் பெயரை பெற்றிருக்கிறான். தன் மனைவியான கிரிஜைக்கும் இந்த மந்திரத்தை உபதேசம் செய்திருக்கிறான் என்பது உபதேசத்தின் உண்மையை / மகிமையை சொல்கிறது; இது மட்டுமல்ல, பார்வதிதேவியும் அந்த உபதேசத்தை அனுஷ்டானத்தில் கொண்டு வந்து (ராம மந்திரத்தை ஜெபித்து), பரம மங்கள ஸ்வரூபள் என அழைக்கப்பட்டு, பெண்களின் மாங்கல்ய சௌபாக்யத்தின் அதிதேவதையாக இருக்கிறாள். பெண்கள், கௌரீதேவியை அர்ச்சித்தே மாங்கல்யத்தை கட்டிக் கொள்வர். பெண்களில் மாங்கல்யம் உள்ளவரே மங்களஸ்வரூபர். அது இல்லாதவர் அமங்கள ஸ்வரூபர். மாங்கல்யம் உள்ளவர்களுக்கு இஹபரங்களில் சுகசம்பத்துகளின் ப்ராப்தி கிடைக்கிறது. மற்றவர்களுக்கு அல்ல. இத்தகைய திவ்ய நாமத்தை ஸ்வயம் நிரந்தரம் ஜெபிக்கும் சதாசிவன் ராமபக்தன் அல்லவா? துஷ்ட ராவணன் ஸ்வயம் அண்ணனாக இருந்தாலும், தன் அறிவுரைகளைக் கேட்க மறுத்த அவனின் உறவினை விட்டு, ராவணனின் எதிரியான ஸ்ரீராமனை சரணடைந்த விபீஷணன் பக்தன் அல்லவா? தன் உத்தம பக்தனான இத்தகையவர்கள், உலகத்தால் பூஜிக்கப்பட வேண்டியவர்கள் என்று சொல்லிக் காட்டுவதற்காக, அவர்களை பிரதிஷ்டை செய்து, லீலாமானுஷ விக்ரகனான தான் ஸ்வயம் அர்ச்சித்தான் என்பது, ஸ்ரீராமன் பக்தர்களை விரும்புபவன் என்றும், கருணைக்கடல் என்றும்

நிரூபிக்கிறது. ஆகையால், தன் பாப பரிகாரத்திற்காக ஸ்ரீராமன் சிவனை பிரதிஷ்டை செய்து பூஜித்தான் என்று சொல்லாமல், ஸ்ரீராமனே சர்வோத்தமனான நித்ய குணபூர்ணனான பரபிரம்மன் என்று திடமான நம்பிக்கை உள்ளவர்கள் ஆகுங்கள் என்று உபதேசம் செய்யப்படுகிறது. இதே ஆதாரத்தை அபரோக்ஷ ஞானிகளான ஸ்ரீபுரந்தரதாசரே முதலான தாசராயர்கள், வெவ்வேறு விதமாக வர்ணித்துள்ளனர்.

ராம மந்த்ரவ ஜபிஸோ ஹே மானவ ||ப
ஆ மந்த்ர ஈ மந்த்ர ஜபிஸி கெடலுபேட |
ஸோமஷேகர தன்ன ஸதிகெ ஹேளித மந்த்ர ||அப

ராம நாம பஜிஸிதவரிகெ உண்டெ பவத பந்தன ||ப

கிரிஜெ ராமசந்த்ரஜபிஸி பரமமங்களியாதளோ ||

லட்சுமி அவதாரளான ருக்மிணிதேவியும் கிருஷ்ணனை அடைவதற்கு முன்னர், உலக வழக்கப்படி கிரிஜையை பூஜித்து, ஒரு வழிகாட்டி ஆகியிருக்கிறாள். அதைப்போல ஸ்ரீராமனும்கூட தன் பக்தர்களின் பூஜையால், சுஜீவர்கள் தன் அருளுக்கு பாத்திரர் ஆகுவர் என்னும் நீதியை வெளிப்படுத்தினான் என்று அறிய வேண்டும்.

ஸ்ரீராமசந்திரன் சிவ பார்வதியரால் மட்டும் வணங்கப்படுகிறான் என்று எப்போதும் நினைக்கக்கூடாது. ராம மந்திரமானது, அனைத்து பக்தர்களாலும் வணங்கப்படும் சர்வ தாரக மந்திரமே ஆகும்.

இந்த ஆதாரத்தை ஸ்ரீபுரந்தரதாசர் இவ்வாறு தெளிவு படுத்தியிருக்கிறார்.

மாருதாத்மஜ நித்ய ஸ்மரணெ மாடுவ மந்த்ர

ஸருவ ரிஷிகளல்லி சேரித மந்த்ர
துரித கானனகிது தாவானலமந்த்ர
பொரெது விபீஷணகெ பட்டகட்டித மந்த்ர ||

ஞானநிதி நம்ம ஆனந்ததீர்த்தரு
ஸானுராகதி நித்ய ஸேவிப மந்த்ர
பானுகுலாம்புதி ஸோம நெனிப மந்த்ர
தீனரக்ஷக புரந்தரவிட்டலன மந்த்ர ||

**மூலரூபதி[3] ஸூரரு த்[3]வாரகாயாத்ரெயலி**
**பாலஸாக[3]ரயாத்ரெ க[3]ர்ப்ப[4]யாத்ரெ கேளிய**
**ஷூலத[4]ர க[2]ளக[3]ஞ்சி பு[4]வனவெல்லவ ஸ்துதி ।**
**ஸ்ரீலோலனிஹ வைகுண்ட[2]யாத்ரெயிந்த[3] ப[3]து[3]கனெ**
**பூ[4]லோகத[3]லி புட்டி ஹயவத[3]ன க்ருஷ்ண மாடி[3]த[3]**
**கைலாஸெயாத்ரெ கைவல்யபதிகெ[3] லீலெ ||8**

த்வாரகயாத்ரெயலி - பவித்ரமான த்வாரகையில் யாத்திரையை மேற்கொள்வதற்காக (பிறந்து சஞ்சாரம் செய்வதற்காக); ஸூரரு - தேவதைகள்; மூலரூபதி - தத்தம் மூலரூபத்தினால்; பாலஸாகரயாத்ரெ - பாற்கடலுக்குச் சென்று (பூமியில் அவதரித்து, பூபாரத்தை பரிகரிப்பதற்காக ஸ்ரீஹரியை வணங்கி; கர்ப்பயாத்ரெ - பிறகு, பகவந்தனின் ஆணையைப் போல, அம்சத்தினால் பிறப்பதற்கு தாயின் கர்ப்பத்தில் வந்தார்கள் என்பதை; கேளெய - கேட்கவில்லையா?; ஷூலதரஷிவனு - சூலத்தை ஏந்திய சிவன்; களகஞ்செ - துஷ்டனான வ்ருகாசுரனுக்கு பயந்து; புவனவெல்லவ ஸூத்தி - அனைத்து லோகங்களில் தன்னை காப்பாற்றிக் கொள்வதற்காக ; ஸ்ரீலோலனிஹ - லட்சுமிப்ரியனான ஸ்ரீவிஷ்ணு இருக்கும்; வைகுண்ட யாத்ரெயிந்த - வைகுண்ட லோகத்திற்குச் சென்று; பதுகனெ - அங்கும் துரத்தி வந்த அசுரனால், காப்பாற்றப்பட வில்லையா? (ஸ்ரீவிஷ்ணு அவனை காப்பாற்றவில்லையா?); ஹயவதனக்ருஷ்ண - ஸ்ரீஹயக்ரீவாபின்ன ஸ்ரீகிருஷ்ணன்;

பூலோகதலி புட்டி - பூலோகத்தில் அவதரித்து; மாடித கைலாஸயாத்ரெ - புத்திரனுக்காக சிவனைக் குறித்து தவம் செய்ய, கைலாய யாத்திரை செய்தான் என்பது; கைவல்யபதிகெ - மோட்சத்தை கொடுக்கக்கூடிய ஸ்ரீகிருஷ்ணனுக்கு; லீலெ - ஒரு விளையாட்டு மட்டுமே (மகனை வேண்டி சிவனை யாசித்தான் என்பது உண்மையல்ல).

ஸ்ரீகிருஷ்ணனின் வசிக்கும் இடமான த்வாரகை, ஸ்ரீலட்சுமியின் சான்னித்யத்தால் செல்வச்செழிப்போடு சாட்சாத் வைகுண்டத்தைப் போல ஒளிர்ந்து வந்தது. ஸ்ரீஹரி, பூமியில் அவதரிக்கும் காலம் வந்தபோது, பிரம்மதேவனை முன்வைத்து, தேவதைகள் அனைவரும் மூலரூபத்தினால் பாற்கடலின் வடக்கரையில் நின்று அவனை வணங்கி, அவதாரார்த்தமாக பிரார்த்தித்தனர். ஹரி ஸ்ரீகிருஷ்ண ரூபத்தினால் அவதரிக்க, தேவதைகள் அனைவரும் பகவந்தனின் ஆணைக்கேற்ப, சிலர் ஸ்ரீகிருஷ்ணாவதாரத்திற்கு முன், சிலர் பின் என பூமியில் அவதரித்தனர். இதற்காக இந்த தேவதைகள் மாத்ரு கர்ப்பத்தில் வந்து, ஸ்வயோக்ய ப்ராக்ருத தேகத்தைப் பெற்று, பூ வைகுண்டமான த்வாரகையில் ஸ்ரீகிருஷ்ண சேவையை செய்து மகிழ்ச்சியடைந்தனர்.

இதனால் ஸ்ரீகிருஷ்ணன் சகல தேவோத்தமன் என்று நிச்சயமாகிறது. அம்சத்தினால் அவதரித்தபோது மட்டுமல்லாமல், பாற்கடலுக்குச் சென்றபோது, ஸ்வ மூல ரூபங்களால் ஸ்ரீஹரியை வணங்குகின்றனர். 'மூலரூபதி ஸுரரு த்வாரகாயாத்ரெயலி' என்றதால், ஸ்ரீகிருஷ்ணன் த்வாரகெயில் இருக்கும்போது பிரம்மாதி சுரர்கள் மூலரூபங்களால்கூட அங்கு வந்து, ஸ்ரீகிருஷ்ணனை வணங்கி, தன்யர் ஆகியிருக்கின்றனர் என்னும் அர்த்தத்தை தெரிந்து கொள்ள வேண்டும். த்வாரகா பட்டணத்தை ஸ்ரீகிருஷ்ணன் விஷ்வகர்மன் மூலமாக நிர்மாணம் செய்தபோது, அனைத்து

தேவதைகளும் தமக்கு ஸ்ரீஹரியின் மூலமாகவே கிடைத்த அனைத்து வஸ்துக்களையும் சமர்ப்பித்திருக்கின்றனர். ஸ்ரீகிருஷ்ணனை பரந்தாமத்திற்கு வர வேண்டும் என்று பிரார்த்தித்து, அப்படி பரந்தாமத்திற்குப் போகும்போதுகூட பிரம்மாதி சுரர்கள், மூலரூபத்தில் இருக்கிறார்கள். இந்த விஷயங்கள் அனைத்தும், பாரத, பாகவதாதிகளில் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு, பிரம்ம ருத்ராதி தேவதைகள் அனைவரும் தத்தம் மூலரூபங்களால் ஸ்ரீகிருஷ்ணனையே வணங்கி, ஸ்ரீகிருஷ்ண அபின்னனான ஸ்ரீஹயக்ரீவனையே சர்வோத்தமன் என்று ஏற்றுக் கொள்கின்றனர்.

ஸுதர்மாம் பாரிஜாதம் ச மஹேந்த்ர: ப்ராஹிணோத்தரே: ।
யத்யத்பகவதாதத்தம் அதிபத்யம் ஸ்வஸித்தயே ।
ஸர்வம் ப்ரத்யர்பயாமாஸுர்ஹரௌ பூமிகதே ந்ருப ।
அத தத்ப்ராகமத பிரம்மா பவான்யா ச ஸமம் பவ: ।
மஹேந்த்ர ப்ரமுகா தேவா முனய: ஸப்ரஜீஷ்வரா: ॥
(பாகவத ஸ்லோகங்கள்)

இந்த பிரமேயத்திற்கு, ஸ்ரீகிருஷ்ணன் கைலாயத்திற்குச் சென்று, சிவனை வேண்டி தவம் செய்தான் என்பது எதிரானதுதானே என்னும் சந்தேகத்தை பரிகரித்தவாறு, இது வைகுண்டபதியான ஸ்ரீகிருஷ்ணனின் உலகை மயக்கத்தக்க லீலை என்று அறிய வேண்டும் என்கிறார். இதனை விளக்குவதற்காக, சிவன், தான் கொடுத்த வரத்தினால், தன்னையே சுட்டுப் பொசுக்க வந்த வ்ருகாசுரனிமிருந்து தன்னை காத்துக் கொள்ள, வைகுண்டபதியான ஸ்ரீவிஷ்ணுவினாலேயே காப்பாற்றப்பட்டான் என்னும் கதையை உதாரணம் கொடுத்திருக்கிறார்.

ததோ வைகுண்டமகமத் பாஸ்வரம் தமஸ: பரம் ।
யத்ர நாராயண: ஸாக்ஷான்யஸினாம் பரமா கதி: ॥

மற்றும்

முமுசு:புஷ்பவர்ஷாணி ஹதே பாபே வ்ருகாஸுரே ।

ஆகிய பாகவத ஸ்லொக பாகங்களில், ஹரன் வைகுண்டத்திற்குச் சென்று ஸ்ரீவிஷ்ணுவினால், வ்ருகாசுர பயத்திலிருந்து காப்பாற்றப்பட்டான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**யாத்ரெயனு மாடி3ஸிகொண்ட3 ஹர ஹிரியனஹனாகி3 யு**
**குதி பா3தி4தவாய்து ஹரிஹரரொளைக்ய**
**சித்ர நின்ன முதகெ நீனெ ஷத்ருவாதெ3 ஜா ।**
**த்யுத்தரவ பேளெ பராஜயவு பா3ரதி3ஹுதெ3**
**மத்தெ நெனெயொ ஹயவத3னகி3து3 லீலெயாத3ரெ**
**ஸ்வத்வ ஹெச்சிது ஹரிஸர்வோத்தமனெம்ப3 ஸ்ருதிகெ3** ||9

யாத்ரெயு - கைலாய யாத்திரையை; மாடிஸிகொண்ட = (முந்தைய பத்யத்தில் கூறியதைப் போல ஸ்ரீகிருஷ்ணனால்) வரம் பெறுவதற்காக வந்த; ஹர - சிவன்; ஹிரியனஹனாகி - உத்தமன் ஆகிறான் ஆகையால் (கிருஷ்ணனைவிட பெரியவனும், பூஜ்யனும் ஆகையால்) ஹரிஹரரொளு - ஸ்ரீவிஷ்ணு ருத்ரரில் (ஹரி சங்கரரில்), ஐக்யசித்ர - இருவரும் ஒன்றே (அபின்னர்கள்) என்னும் நிரூபணை, யுகுதிபாதகவாய்து - (ஐக்யம் என்னும் சிந்தனை) தவறு என்றானது; நின்ன மதகெ - உன் மதத்திற்கு (உன் மதத்தின் சித்தாந்தத்திற்கு); நீனே ஷத்ருவாதெ - நீயே (சிவனை ஸ்ரீகிருஷ்ணன் வணங்கினான் என்னும் சொல்லும் நீயே) ஐக்யவாதத்தின் எதிரியானாய்; ஜாத்ருத்தரவ பேளெ - உன் வாதத்திற்கு 'ஜாதி' என்னும் தோஷம் இருக்கிறதென்று பதி கொடுத்தால்; பராஜயவு - (உனக்கு) தோல்வி (வாதத்தில் தோல்வி); பாரதிஹுதெ - வராமல் இருக்குமா? (கண்டிப்பாக தோல்வி வரும்); மத்தெ - அப்படியில்லை என்றால்; (நாம் கூறுவதைப் போல ஸ்ரீகிருஷ்ணனுக்கு கைலாய யாத்திரை வெறும் லீலை என்று கூறினால்); நெனெயொ - சிந்தித்துப் பார் (யோசித்துப் பார்);

ஹயவதனகெ - ஸ்ரீஹயக்ரீவனுக்கு; இது - (ஸ்ரீகிருஷ்ணரூபத்தினால் புத்திரனை வேண்டி தவம் செய்வது), லீலை என்றால், உலகத்தை மயக்குவதற்காக மட்டுமே என்றானால்; ஹரிசர்வோத்தமனெம்ப ஸ்ருதிகெ - ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று சொல்லும் ஸ்ருதிக்கு (வேதத்திற்கு); ஸத்வ ஹெச்சிது - வலிமை (பலம்) அதிகரிக்கிறது.

ஸ்ரீகிருஷ்ணனால் வணங்கப்பட்டான் என்றால், சிவன், ஸ்ரீகிருஷ்ணனைவிட உத்தமன் என்று சொல்ல வேண்டியிருக்கிறதே தவிர, அந்த இருவரும் ஐக்யம் அல்ல - ஸ்வரூபத்தினால் வேறானவர்கள் என்றாகிறது. ஜீவ ஈஸ்வர ஐக்யத்தை சொல்லும் மாயாவத சித்தாந்தத்திற்கு, இது (சிவன் உத்தமன் என்று சொல்வது) எதிரானது. சிவன் மற்றும் கிருஷ்ணன் இருவரும் ஒருவரே என்று சொல்ல வேண்டும். ஸத்வஸ்து அல்லது அஸத்வஸ்து (இருப்பது, இல்லாதிருப்பது என்று எவ்விதத்திலும்) நிரூபிக்கமுடியாத மாயா, அவித்யா என்று சொல்லப்படும் அஞ்ஞானம், ஸ்வயம் மித்யையாக இருந்தாலும், ஐக்ய ஞானத்தைக் கொடுக்கிறது என்று சொல்லும் அவர்களது வாதம் சரியல்ல - மிகவும் தவறானது.

இந்த வாதங்களின் விளக்கத்தை புரிந்து கொள்ள, ஸ்ரீமன் மத்வாசார்யர் இயற்றிய ஸ்ரீமத் விஷ்ணுதத்வ நிர்ணய கிரந்தத்தை, ஒரு தக்க குருவிடமிருந்து கற்று அறிய வேண்டும்.

சிவனுக்கு, கிருஷ்ணனிடம் ஐக்யத்தை சொல்லும் வாதி, உத்தமன் என்று கூறினால், பேதத்தை ஒப்புக் கொண்டவராகி, அவரது சித்தாந்தம், அபசித்தாந்தம் ஆகிறது.

சிவனை ஆராதிப்பதற்கு ஸ்ரீகிருஷ்ணன் கைலாய யாத்திரையை மேற்கொண்டான் என்னும் புராண கதைகளால், மாயாவாதியின் வாதத்திற்கு (அவன் பயன்படுத்தும் அனுமானத்திற்கு), ‘ஜாதி’

மற்றும் 'அபசித்தாந்த' என்னும் தோஷங்கள் வருகின்றன. அதனால், ஸ்ரீகிருஷ்ணனின் கைலாய யாத்திரையானது, உலகினை மயக்குவதற்காக ஆனது (சிவன், ஸ்ரீகிருஷ்ணனால் காப்பாற்றப்பட்டான் என்னும் முந்தைய பத்யத்தின் விளக்கமானது, ஸ்ரீகிருஷ்ணனே சர்வோத்தமன் என்பது தெரிகிறது). அதனால், தத்வவாதியின் சித்தாந்தத்தையே ஒப்புக்கொள்ள வேண்டியதாகிறது. மேலும், மாயாவாதியின் சித்தாந்தமானது, ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்னும் சித்தாந்தத்தை எதிர்க்க முடியாததாக ஆகிறது என்றும் அறிய வேண்டும்.

**வந்த்3யமானம் பிதானம் ப்ரதி ப்ரமாணம்**
**எந்து3 ருத்3ரன கூடெ3 ஸ்ருதியு பேளிதாகி3**
**தந்தெ3 மக்கள ப3ளிகெ3 போத3ந்தெ போகி3 மு |**
**குந்த3 மொம்மனிகெ3 ஹிரியதன கொட3லெந்து3**
**முந்தெ3 ஜனிஸித3 கி1ரிய குவரரொளு தன்ன**
**கந்த3ன ஸ்ருஜிஸித3 ஹயவத3ன சதுரனல்லவெ ||10**

'வந்த்யமானம் பிதானம் ப்ரதி ப்ரமாணம்' என்று - ஜகத்பதியான ஸ்ரீஹரி அனைவராலும் (உன்னாலும்) வணங்கப்படத் தக்கவன் என்று' ஸ்ருதி (ஸ்ரீஹரி ருத்ரனால் வணப்படுபவன் என்பதில்) பிரமாணத்தை; ருத்ரன கூடெ - ருத்ரனுக்கு; ஸ்ருதி பேளிதாகி - ஸ்ருதி சொல்லியிருப்பதால் (ஜகத்பதியான ஸ்ரீஹரி, ருத்ரதேவனுக்கும் தந்தை - வணங்கப்படுபவன், என்பதில் ஸ்ருதி பிரமாணம் இருப்பதால்), ஸ்ரீகிருஷ்ணன் புத்திரனை வேண்டி, கைலாய யாத்திரையை மேற்கொண்டான் என்று அனர்த்தத்தை புரிந்து கொள்ள வேண்டும்; தந்தெ - தந்தை; மக்கள பளிகெ போதந்தெ - தன் மக்களின் அருகே சென்றதைப் போல; போகி - போய் (கையாலத்திற்குச் சென்று); முகுந்த - ஸ்ரீகிருஷ்ணன்; மொம்மனிகெ - தன் பேரனுக்கு; ஹிரியதன கொடலெந்து - பெரிய அந்தஸ்தினைக் கொடுப்பதற்காக (தன்னைவிட பெரியவன் என்று உலகிற்கு காட்டுவதற்காக -

அதனால் அயோக்யர்களை மயக்குவதற்காக); முந்தெ ஜனிஸித - முன்பே பிறந்திருந்த; தன் கந்தன - தன் மகனான ப்ரத்யும்னனை (ருக்மிணி புத்திரனை); கிரிய குவரரொளு - தன் மக்களில் சிறியவனாக; ஸ்ருஜிஸித - படைத்தான் என்னும் (தன் சிறிய மகனாக ஆக்கிக் கொண்டான்); ஹயவதன - ஸ்ரீஹரி; சதுரனல்லவெ - (உலகத்தை மயக்கிய) நிபுணன் அல்லவா?

ஸ்ரீகிருஷ்ணனின் சர்வோத்தமத்வ விஷயத்தில், மகனுக்காக சிவனைக் குறித்து தவம் செய்தான் என்னும் பாரதத்தில் வரும் சரித்திரத்தால், வரக்கூடிய சந்தேகத்தை பரிகரிப்பதற்காக, யுக்தியினால், ஸ்ரீகிருஷ்ணன் சிவனிடம் புத்திரனை வேண்டி பெற்றான் என்பவர்களின் உண்மையான அபிப்பிராயத்தை நிறுவி, ஸ்ருதியில் சொல்லப்பட்ட சர்வோத்தமத்வத்தை நிர்ணயிக்கிறார்.

நித்யமான வேதம் (வேதபுருஷன் - வேதங்களை ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் வெளிப்படுத்திய புருஷ ஷப்த முக்ய வாச்யனான ஸ்ரீஹரி, அல்லது வேதாபிமானி தேவதை, அல்லது, வேதஞானியான ரிஷி, ஸ்ரீவிஷ்ணு, ருத்ரனால் பூஜித்து வணங்கப்படுபவன் என்று சொல்வதால், ஸ்ரீவிஷ்ணுவின் பூஜ்யத்வமும், ருத்ரனின் பூஜகத்வமும் நித்யமே, என்று தெளிவாகிறது. ஸ்ரீவிஷ்ணு தன் அவதாரங்களில், வேறு விதமாக நடந்தால், அதற்கு சரியான காரணத்தை அறிய வேண்டும்.

இங்கு கொடுக்கப்பட்டுள்ள ஸ்ருதி, மகனை வேண்டி, ருத்ரனைக் குறித்து, ஸ்ரீஹரி பூஜ்யன் என்பதற்கு, அதற்கு சாதகமான பிரமாணங்களை (விஷ்ணு மகிமைகளை) நிரூபிக்கிறது. ஆகையால், ஸ்ரீகிருஷ்ணன், சிவனிடம் வந்ததையும், தந்தை அன்புடன் தன் மக்களிடம் வந்ததைப் போல, என்று அறிய வேண்டும். பிரம்மன் ஸ்ரீஹரியின் மகன்.

அவனின் மகன் ருத்ரன், பேரன். பேரன் மேல் தாத்தாவிற்கு அதிக ப்ரியம் என்பது அனைவரும் அறிந்ததே.

ஹிரியதன கொடலெந்து - என்பதால், பேரனால் தாத்தா தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டான், தன் அந்தஸ்திற்கு பிரச்னை வராதவாறு பேரனுக்கு தக்க மதிப்பினை கொடுத்தவாறு - என்னும் அர்த்தத்தை ஏற்றுக் கொள்ளலாம் என்றாலும், தன்னைவிட பெரியவன் என்று மற்றவர்களுக்குக் காட்டுவதற்கு' என்னும் அர்த்தத்தை அறியலாம். இந்த இரண்டாம் பாகமே இங்கு அபிப்பிராயம் என்று அறிய வருகிறது. இங்கு சொல்லப்படும் பாரதத்தில் வரும் கதை இவ்வாறு இருக்கிறது.

ஸ்ரீகிருஷ்ணன் ஒருமுறை இவ்வாறு சிந்தித்தான். 'ஹே ஷம்போ! த்வாபர யுகத்தில் மனிதர்களில் ஒரு அம்சத்தில் அவதரித்து, உன்னை ஆராதித்து வரம் பெறுகிறேன். துர்ஜனர்களுக்கு என்னில் பக்தி உண்டாகுமாறு, என் மகிமைகளை மறைத்து, உன்னையே உத்தமன் என்று சொல்லும் மோக சாஸ்திரங்களை இயற்று; பிற அயோக்யர்கள் தமக்கு யோக்யமான தமஸ்ஸினை பெறுவதில்லை. அதனை (அந்த வரத்தினை) நடத்திக் கொடுக்கும் காலம் இப்போது வந்திருக்கிறது'.

உடனடியாக, பகவத் சங்கல்பத்தை அறிந்து, அதன்படி லட்சுமிஸ்வரூபளான ருக்மிணிதேவி, தனக்கு மகன் (பிரத்யும்னன்) பிறந்திருந்தாலும், அஸ்திர வித்யா அறிந்தவனும், வலிமையானவனும், பக்த்யாதி குணங்களால் உத்தமனுமான ஒரு மகன் வேண்டும் என்னும் ஆசையை வெளிப்படுத்தினாள். ஸ்ரீகிருஷ்ணன், கைலாய பதியான சிவனை ஆராதித்து புத்திர வரத்தினைப் பெறுவோம் என்று, ருக்மிணி தேவிக்கு சமாதானம் சொல்லி, கருடாரூடனாகி

ருக்மிணி தேவியுடன் பதரிகாஸ்ரமத்திற்குச் சென்று, அங்கு ஒரு இரவு தங்கியிருந்து, கைலாய பர்வதத்தை அடைந்தான்.

முன்னர் சிவனுக்கு இந்த வரத்தைக் கொடுக்கும்போது, அசுர மோகனத்திற்காக, உன்னைக் குறித்து 12 ஆண்டு காலம் தவம் செய்கிறேன் என்று, கூறியிருந்தான். அதனை உண்மையாக்குவதற்காக, மேஷாதி 12 ராசிகளில் சஞ்சரிப்பதற்கு தலா ஒவ்வொரு ஆண்டு எடுத்துக்கொள்ளும் ப்ருஹஸ்பதியை (குருவை), ஒரே நாளில் 12 ராசிகளில் சஞ்சரிக்குமாறு செய்து, ஒரு நாளையே 12 ஆண்டுகளின் குறியீடாக செய்து, தவத்தினை செய்து முடித்தான்.

சிவன், இந்திராதி மற்ற சர்வதேவ ரிஷ்யாதிகளுடன் சேர்ந்து, ஸ்ரீகிருஷ்ணனிடம் சாஷ்டாங்கமாக வணங்கி, துதித்து, தன்னைப் பின்பற்றுபவர்கள் அனைவருக்கும் ஸ்ரீகிருஷ்ணன் சர்வோத்தமனான ஸ்ரீஹரியே என்று உபதேசம் செய்து, ருக்மிணி தேவி விரும்பிய புத்திரன், இப்போது பிறக்கிறான். அவனில் விரும்பிய நற்குணங்கள் அனைத்தும் இருக்கின்றன. அவனே பிரத்யும்னன் - காமதேவனின் அவதாரம். முன்னர் நான் காமனை எரித்தபோது, காமபத்னியான ரதிதேவி என்னிடம் பிரார்த்தனை செய்துகொண்டதைப் போல, ஸ்ரீகிருஷ்ணனின் புத்ரனாக பிறக்கிறான். அப்போது உனக்கு உன் கணவன் கிடைக்கட்டும், என்று வரம் கொடுத்திருந்தேன். என்னுடைய வரத்தினைப் போல, பிறந்திருக்கும் இந்த பிரத்யும்னனையே நான் உனக்கு கொடுத்த புத்திரன் என்று அறியுங்கள்' என்று கூறி, ஸ்ரீகிருஷ்ணனின் அனுமதியைப் பெற்று திரும்பி வந்தான்.

ஆகையால், ப்ரத்யும்னனையே சிவனால் கொடுக்கப்பட்ட மகன் என்று வைத்துக்கொண்டால், அப்போது ஸ்ரீகிருஷ்ணனின் இதர புத்திரர்கள் அனைவரும் பிறந்திருந்த காரணத்தால், ப்ரத்யும்னன் ஸ்ரீகிருஷ்ணனின் மக்களில் சிறியவன் ஆகிறான்.

இப்படியான சாதுர்யம், நடவடிக்கைகள், ஸ்ரீகிருஷ்ணனைத் தவிர வேறு யாரால் ஆவதற்கு சாத்தியம்?

மகனைப் பெற வேண்டும் என்பதற்காக கைலாயத்தில் தவம் செய்து, ஸ்ரீகிருஷ்ணன் சிவனிடமிருந்து வரத்தினை பெற்றான் என்னும் செய்தியால் தமோயோக்ய ஜீவர்கள், தாரதம்யத்தில் ஸ்ரீகிருஷ்ணன் சிவனைவிட குறைவு என்னும் மித்யா ஞானத்தைப் பெற்று, அந்தம்தமஸ்ஸிற்கு செல்கிறார்கள்.

இதற்கான தக்க ஆதாரங்கள், பாரத தாத்பர்ய நிர்ணயத்தின் வாக்கியங்களால் தெளிவாகிறது.

(மயா வரோ ஹி ஷம்பவே ப்ரதத்த ஆஸ பூர்வத: ।
வரம் க்ருஹீஷ்ய ஏவ தே ஸகாஷதோ விமோஹயன் ॥
மற்றும்
க்ருஷ்ணோஷ்யயோக்ய ஜனமோஹனமேவ வாஞ்சன் ।
துஷ்டாவ ருத்ரஹ்ருதிகம் நிஜமேவ ரூபம் ॥)

**ரோமகோடி லிங்க3னெந்தெ3னிஸித3 ஹனுமனொந்து3**
**ரோமகெ கோடிஷிவர மாடு3வ ஷக்த காணிரோ**
**ஆ மஹாத்மன்ன தன்ன ஆளு மாடி3 நடெ3ஸிகொண்ட ।**
**ராமசந்திரனே ஜக3க்கெ பரதெ3ய்வ காணிரோ**
**ஸ்வாமிஹயவத3ன வேத3வ தந்து3 கமலஜன**
**காமிதவனித்தனாகி3 அவனெ ஜக3தொ3டெ3ய ॥11**

ரோமகோடிலிங்கனு - ஒவ்வொரு ரோமங்களில் கோடி லிங்கங்கள் உள்ளவன்; எந்தெனிஸித - என்று புகழ்பெற்ற; ஹனுமனு - ஹனுமந்தன்; ஒந்து ரோமகெ - தன் தேகத்தின் ஒவ்வொரு ரோமத்திற்கும்; கோடிஷிவர - கோடிசிவனை; மாடுவ ஷக்தி - செய்யக்கூடிய (படைத்து தரிக்கும்) சாமர்த்தியம் உள்ளவன்; காணிரோ - அறிந்துகொள். ஆ மஹாத்மன்ன - இப்படியான மகாத்மனை (புகழ்பெற்ற

ஹனுமந்தனை), தன் ஆளுமாடி நடெஸிகொண்ட - தன் சேவகனாக ஆக்கிக்கொண்டு அவனை ஸ்வாமியாக ஆண்ட, ராமசந்த்ரனெ - ஸ்ரீராமனே, ஜனகெ - உலகிற்கு, பரதெய்வ காணிரோ - சர்வோத்தமன் என்று அறிந்துகொள்; ஸ்வாமிஹயவதன - ஸர்வஸ்வாமியான ஸ்ரீஹயக்ரீவ தேவர்; வேதவ தந்து - தைத்யர்களால் அபகரிக்கப்பட்ட வேதத்தைக் கொண்டு வந்து (அந்த தைத்யர்களை சம்ஹரித்து, வேதத்தைக் கொண்டு வந்து); கமலஜன - (தன் நாபிக் கமலத்திலிருந்து பிறந்த) கமலோத்பவனான பிரம்மனின்; காமிதவனித்தனாகி - அபீஷ்டங்களை நிறைவேற்றுவதால்; அவனெ - ஸ்ரீஹயக்ரீவனே (ஹயக்ரீவனிடமிருந்து அபின்னனான ஸ்ரீராமசந்திரனே); ஜகதொடெய - உலகத்தை ஆளும் ஸ்வதந்த்ர பிரபு ஆகிறான்.

ஸ்ரீவாயுதேவரின் இரண்டாம் அவதாரமான ஸ்ரீபீமசேனனின் இந்த மகாமகிமையை ஸ்ரீபுரந்தரதாசார்யர் இவ்வாறு புகழ்ந்து பாடியிருக்கிறார்:

ரோமரோமக்கெ கோடி லிங்க வுதரிஸித |
பீமன நெனெதரெ பிட்டுஹோகதே பாப ||
அஞ்சிகென்யாதகய்ய சஜ்ஜனரிகெ அஞ்சிகென்யாதகய்யா ||

என்னும் தேவரநாமத்தில் சொல்லப்பட்டிருக்கும் இந்த மகிமை, ஸ்ரீவாயுதேவரின் மூன்று அவதாரங்களுக்கும் பொருந்துகிறது. பலஞானாதி குணங்களில் அவதார த்ரயங்களில் எந்த பேதமும் இல்லை. - மூலரூபத்தைப் போலவே இருக்கிறது என்று 'பளித்தா தத்வபுஷேsதாயி தர்ஷதம்...' என்று பளித்தா சூக்தம் சொல்கிறது.

கருட சேஷ ருத்ரரைவிட, தாரதம்யத்தில் பிரம்மவாயுகள் 10,000 குணங்கள் அதிகம் என்று சொல்லியிருக்கும்போது, வாயுதேவர் ப்ரதிரோமத்தினால் கோடி ருத்ரதேவரை படைத்து தரிக்கும்

சாமர்த்தியம் உள்ளவர் என்பது தெளிவாகிறது. தேவதைகளில், ஞானானந்தாதி குணங்களுக்கு கீழானவரைவிட மேலே இருப்பவர்களில், எண்ணிக்கை மற்றும் அளவினால் ஷதகுணாதி (ஷத-தஷ என்று) உத்தமத்வம் இருந்தாலும், அந்த குணங்களுக்கு அம்ஷ, விசித்ர, ஆகியவை இருப்பதாலும், (அந்த உத்தமரில்) அத்யதிகமான விஜாதியகுண (கீழானவர்களில் இல்லாத எண்ணிக்கையற்ற குணங்களின்) பாவங்கள் (இருப்பு), உத்தமர்களின் காரியங்களால் கிடைக்கக்கூடிய மற்ற மகிமைகளின் இருப்பு கிடைப்பதால், உத்தமர்கள், ஷத-தஷ குணங்கள் மட்டுமல்ல, அனந்தகுண அதிகர்கள் என்று சொல்ல வேண்டும்.

ததா ச ஞானானந்த்ய மனுபபன்னமித்யே தன்னிரஸ்தம் ।
தைத்திரீயாத்யுச்யமான ஷதாத்யுத்தமத்வஸ்ய
ஸஜாதீயானந்தாதி ஸங்க்யாபரிமாண மாத்ரவிஷயத்வாத் ॥

என்னும் சரஸபாரதி விலாஸ வாக்கியங்களில், மேற்கோள் காட்டப்பட்டிருக்கும் அணுபாஷ்ய ஸ்லோகங்களால் அறியப்படுகிறது. ஆகையால், ருத்ராதி கீழின பதவிகளுக்கு தகுதியான ஜீவர்களை கோடி எண்ணிக்கையில் தரிக்கும் (காப்பாற்றும் / அருளும்) சாமர்த்தியம் பிரம்ம வாயுகளுக்கு இருக்கிறது என்பது ஆதாரம் இல்லாத வாக்கியம் கிடையாது. இவரின் ஞான பலாதிகள், ருத்ராதிகளைவிட எண்ணிக்கையற்ற குணங்களால் அதிகமே ஆகிறது.

ஸ்ரீவாதிராஜர், தம் 'பாவபிரகாஷிகா டீகை'யில், 'தாப்யஸ்ச தே ஷதகுணை:தஷதோ வரிஷ்டா:பஞ்சோத்தரைரபி யதாக்ரமத: ஸ்ருதிஸ்தா:' ஆகிய (பாரத தாத்பர்ய நிர்ணய) வாக்கியங்களில் வியாக்யானத்தில் 'ஷதகுண' என்றால், நூறு என்னும் எண்ணிக்கையல்ல. ருத்ரரின் ஞானத்தை இரு முறை வைத்துக்கொண்டால் (அதாவது 2ஆல் பெருக்கினால்), அதனை ஒரு குணத்தால் அதிகம் என்று அறிந்து, அதனை 2ஆல்

பெருக்கி, அதனை இரு குணங்கள் அதிகம் என்றும், இவ்வாறே நூறு முறை (அதாவது 2^100 - 2னை 100 முறை பெருக்கினால்), வரும் எண்ணிக்கையளவு அதிகம் என்று அறிய வேண்டும் என்று கூறுகிறார்.

இதைப்போல கணக்கிட்டால், ருத்ரனின் ஞானத்தைவிட சரஸ்வதியின் ஞானம், மிகவும் அதிகமாக இருக்கிறது. சரஸ்வதியின் ஞானத்தைவிட ஷதகுணம் அதிகமானது பிரம்ம வாயுகளின் ஞானம். இவ்வாறு கணக்கிடுவதற்கு 'ஷ்ரீடி வ்யவஹார' என்று பெயர்.

தைத்யர்கள் வேதங்களை அபகரித்தனர் என்றால், வேதகிரந்தங்களை அல்ல. பிரம்மதேவர், கிரந்தங்களை முன்னே வைத்துக்கொண்டு அத்யயனம் செய்து, வேதத்தை கற்றுக் கொண்டவர் அல்ல. வேதம், பகவந்தனிடமிருந்து வந்தவை என்னும் பரம்பரையை, பிரஜைகளில் அதைப்பற்றிய பிராமாணிக புத்தியை உருவாக்குவதற்கு, தான் படைக்கப்பட்டவுடன், ஸ்ரீஹரியிடமிருந்து வேதாதி அனைத்து சாஸ்திரங்களையும் கேட்டுக்கொண்டார். வேதஞானத்திற்கு அனதிகாரிகளான அயோக்யர்கள் வேதத்தை (குரு உபதேஷாதி வழிகளை புறக்கணித்து) அபகரித்து, அவற்றை அபவித்ரம் ஆக்குவதற்கு முயற்சி செய்தபோதெல்லாம், ஸ்ரீஹரி, அயோக்யர்களை அழித்து, வேதங்களை காப்பாற்றுகிறார் (அதிகாரி ஜீவர்களில் மட்டும் ஸ்தாபிக்கிறார்). அதிலும், பிரம்மதேவனிடமிருந்து தைத்யர்கள் வேதங்களை அபகரிப்பது என்றால், பிரம்மனின் அனுமதியின்றி வேதங்களை அவனின் முகத்திலிருந்து கேட்டுக்கொண்டு போவது. இதனால், பிரம்மதேவனுக்கு அபாரமான மனவேதனை உண்டாகிறது.

இவ்வாறு தைத்யர்கள் சத்தத்வங்களை மறைத்து, மித்யாஞானத்தை பரப்பிய போதெல்லாம், தேவதைகள் ஸ்ரீஹரியை வேண்டி, தத்வஞானத்திற்கு அதிகாரிகளான

சஜ்ஜனர்களுக்கு, ஞானத்தைக் கொடுக்கும் சந்தர்ப்பத்தை உருவாக்கிக் கொடுக்கிறார்கள். ஸ்ரீஹரி தானாகவோ அல்லது தன் பக்தர்களாலோ, அந்த காரியத்தை நிறைவேற்றிக் கொடுக்கிறான். பிரம்மனின் முகத்திலிருந்து வெளிவந்த வேதங்களை (தினப்படி பிரளயகாலத்தில்), ஹயக்ரீவ நாமக அசுரன் அபகரித்து, பிரளய ஜலத்தில் மறைத்தான். ஸ்ரீஹரி, மத்ஸ்ய ரூபத்தை எடுத்து, பிரளயோதகத்தை பிரவேசம் செய்து, அந்த அசுரர்களைக் கொன்று வேதங்களை பிரம்மனிடம் கொடுத்தான் (அயோக்யர்களிடம் அவை சேராதவாறு அருளினான்).

இவ்வாறே ஆதிஸ்ருஷ்டியில் வேதங்களை திருடி வேதத்ரோகிகளான மது கைடபர் என்னும் தைத்யர்களைக் கொன்று, வேதங்களை காப்பாற்றி, பிரம்மனுக்கு அருளினான். அப்போது ஸ்ரீஹரி எடுத்த ரூபமே ஸ்ரீஹயக்ரீவ ரூபம். ஸ்ரீவாதிராஜரால் வணங்கப்பட்ட ஸ்ரீஹயக்ரீவன் இவனே.

(தஸ்ம்யை பவான் ஹயஷிரஸ்தனுவம் ச பிப்ரத்
வேதத்ருஹாவதிபலௌ மதுகைடபாக்யௌ ।
ஹத்வாsனயச்ருதிகணாம்ஸ்து ரஜஸ்தமஷ்ச
ஸத்வம் தவ ப்ரியதமாம் தனுமாமனந்தி ॥ (பாகவதம்)

இந்த ஸ்லோகத்தில் ஸ்ரீஹயக்ரிவ அவதாரத்தின் வர்ணனை இருக்கிறது. மத்ஸ்ய ரூபம் சம்ஹரித்த தைத்யன் ஹயக்ரீவாசுரன். மதுகைடபர்களை சம்ஹரித்த பகவத் அவதாரம் ஸ்ரீஹயக்ரீவர். சத்வ ரஜஸ் தமம் என்னும் ப்ராக்ருத குணங்களை நிமித்தமாக வைத்துக்கொண்டு, வைத்து வந்த இத்தகைய பகவத்ரூபங்கள் ஞானிகளுக்குப் ப்ரியமானவை என்று இந்த ஸ்லோகம் சொல்கிறது).

**வரவ ஷோதி4பனெந்து3 கர தன்ன ஷிரத3 மேலெ**
**இரிஸப3ந்த3 க2ளக3ஞ்செ ஹர தன்ன ஸுரேஷ்வரன**
**அரமனெகெ ஹோகி3 அல்லி பரிஹரவ காணதெ3 நம்ம |**
**ஸிரியரஸன மொரெஹோக3லு ஹரணவனு பொரெத3 க3ட3**
**ஷரணரக்ஷகனெம்ப3 பி3ருது3ள்ள ஹயவத3ன**
**ஹரியல்லதெ3 பிரிதொ3ந்து3 பரதெ3ய்வவில்லவைய்ய ||12**

வரவ - வரத்தை (சிவன் தனக்குக் கொடுத்த வரத்தை); ஷோதிபனெந்து - பரிட்சை செய்து பார்க்கவேண்டும் என்னும் நோக்கத்தில்; கர - தன் கைகளை; தன்ன ஷிரத மேலெ - வரமளித்த சிவனின் தலைமேல்; இரிஸபந்த - வைப்பதற்கு வந்த; களகெ - துஷ்டனான வ்ருகாசுரனுக்கு; அஞ்சி - பயந்து; ஹர - சிவன்; தன்ன ஸுரேஷ்வரன - தனக்கு ப்ரியமான பிரம்மதேவனின்; அரமனெகெ - சத்யலோகத்தில் இருக்கும் அவனின் அரண்மனைக்கு; ஹோகி - (அசுரன் துரத்திக் கொண்டு வருவதால்) ஓடிப் போய்; அல்லி - அங்கு (பிரம்மதேவனால்); பரிஹரவ காணதெ - அசுரனிடமிருந்து தன்னை காத்துக் கொள்ளும் வழியைக் காணாமல்; நம்ம ஸிரியரஸன - நம்ம ஸ்வாமியான லட்சுமிபதியை; மொரெஹோகலு - (வைகுண்டத்திற்குச் சென்று) ஆதரவு கேட்க (சரணடைந்து உயிர்ப்பிச்சை கேட்க); ஹரணவனு - தேகத்தை; பொரெத கட - காப்பாற்றவில்லையா?; வ்ருகாசுரனை வடு ரூபத்தில் வந்து ஏமாற்றி, அவனின் கையை அவனின் தலையின் மேலேயே வைத்துக் கொள்வது போல செய்து, கொன்று, சிவனின் உயிரை காப்பாற்றினான் என்பது உலக பிரசித்தம்; ஷரணரக்ஷகனெம்ப பிருதுள்ள - சரணாகதி அடைந்தவர்களை தவறாமல் காப்பாற்றுகிறான் என்னும் புகழைக் கொண்ட; ஹயவதன - ஸ்ரீஹயக்ரீவ ரூபனான; ஹரியல்லதெ - ஸ்ரீஹரியை விட்டால் (ஸ்ரீஹயவதனாபின்ன ஸ்ரீஹரியைத் தவிர); பிரிதொந்து - அதிகமான வேறொன்று; பரதெய்வவு இல்லவைய்ய - சிறந்த தேவதை (எங்கும் என்றும்) இல்லவேயில்லை.

வ்ருகாசுரன் தனது தவத்தால் சிவனை மகிழ்வித்தான். சிவன் அவனுக்கு தரிசனம் அளித்து வரம் கேள் என்று கூற, 'என் கையை யார் தலையின் மேல் வைக்கிறேனோ, அவன் இறக்கட்டும்' என்னும் வரம் கேட்டுப் பெற்றான். வேண்டிய வரத்தைக் கொடுக்கும் சிவன், அந்த வரத்தையும் அருளினான். உடனடியாக, அந்த துஷ்ட தைத்யன், சிவனின் தலை மேல் கை வைக்க வந்தான். சிவனின் வரத்தை சோதனை செய்து பார்க்க வேண்டும் என்பது ஒரு நோக்கமாக இருந்தாலும், சிவன் இறந்தால் கௌரி தேவியை தான் அடையவேண்டும் என்பது அவனது உண்மையான ஆசை. இந்த அசுரனிடமிருந்து தன்னை காத்துக்கொள்ள ஓடிய சிவன், கடைசியாக வைகுண்டத்திற்குச் சென்று ஸ்ரீவிஷ்ணுவால் காப்பாற்றப்பட்டான்.

(இத்யுக்த:ஸோ஽ஸுரோ நூனம் கௌரீஹரணலாலஸ: ।
ஸ தத்வரபரீக்ஷார்த்தம் ஷம்போ மூர்த்னீ கிலாஸுர: ॥
ஸ்வஹஸ்தம் தாதுமாரேபே ஸோ஽பிப்யத் ஸ்வக்ருதாச்சிவ: ।
ஆகிய பாகவத ஸ்லோகங்களில் வரும் விஷயங்களையே இந்த ஸ்லோகம் சொல்கிறது).

8ம் பத்யத்தில் இந்த சம்பவம் வந்திருக்கிறது. அந்த பத்யத்தின் விளக்கத்தை ஒரு முறை படிக்கவும். 8-9-10 ஆகிய பத்யங்களால், ஸ்ரீகிருஷ்ண ரூபத்தினால், ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. சிவ சர்வோத்தமத்வத்தை சொல்லும் சைவர்களின் அபிப்பிராயம் தவறு என்று சொல்லப்பட்டிருக்கிறது. மறுபடி இந்த வ்ருகாசுரனின் கதையை, ஸ்ரீஹரியே பரதெய்வம் என்னும் ஆதாரத்தை நிரூபிப்பதற்கும், அவன் ஷரணாகத ரக்ஷகன் என்னும் மகிமையையும் விளக்குவதற்கும், இந்த பத்யம் பயன்பட்டிருக்கிறது. பிரமேய விஷயங்களை மேலும் நன்றாக விளக்குவதற்காக ஒரே புராண சரித்திரத்தை திரும்பத்திரும்ப

பயன்படுத்தினாலும், அதில் புனருக்தி தோஷம் வருவதில்லை என்று அறிய வேண்டும்.

**காஷியொளு ராமமந்த்ரோபதே$^3$ஷவ மாள்ப**
**ஈஷ ஜாணர மட$^3$தி$^3$ ஜக$^3$கெ கு$^3$ருவெந்தெம்ப$^3$**
**ஆ ஷிவன மந்த்ரதே$^3$வதெ தாரகபொ$^3$ம்மனெனிப ।**
**வாஸுதே$^3$வனெ ஜக$^3$கெ பரதெ$^3$ய்வ காணிரோ**
**ஈ ஸுதத்வவ பேள்வ ஹரகெ$^3$ நம்ம ஹயவத$^3$ன**
**ஏஸுமன்னணெய மாடி$^3$த$^3$ருசிதகாணிரோ ॥13**

காஷியொளு - காசி க்ஷேத்திரத்தில்; ராமமந்த்ரோபதேஷவ மாள்ப - ராம மந்திரத்தை உபதேசம் செய்யும்; ஈஷ - ருத்ரதேவன்; ஜாணர மததி - ஞானிகளின் நிச்சய அபிப்பிராயத்தில்; ஜககெ குருவு - அனைவரின் ஞானோபதேஷகர்; எந்தெம்ப - என்னும்; ஆ ஷிவன - அந்த சிவன் உபதேசிக்கும்; மந்த்ரதேவதெ - மந்திரத்தால் போற்றப்படுபவனும், வணங்கப்படுபவனுமான தேவதையே (ஸ்ரீராமனே); தாரக - சம்சாரத்தை தாண்டச் செய்யும்; பொம்மனெனிப - பரபிரம்மன் என்று (வேத உபநிஷத்களில்) சொல்லப்படும்; வாசுதேவனெ - வாசுதேவன்; அவனே, ஜகக்கெ பரதெய்வ காணிரோ - உலகத்தை கட்டிக்காக்கும் சர்வோத்தம தேவதையென்று அறியுங்கள்; ஈ ஸுதத்வவ - என்னும் இந்த உண்மையான, மோட்சத்தை தரக்கூடிய தத்வத்தை (யதார்த்த ஞானத்தை); பேள்த ஹரகெ - (சஜ்ஜன லோகத்திற்கு) உபதேசம் செய்த சிவனுக்கு; நம்ம ஹயவதன - நம் (அனைத்து சஜ்ஜனர்களின்) ஸ்வாமியான ஸ்ரீஹயவதனன், ஏஸு மன்னணெய மாடிதரு - எவ்வளவு பூஜித்து, போற்றி, வணங்கினாலும்; உசித காணிரோ - அது சரியானதே என்று அறியுங்கள்.

ஸ்ரீராமன், சிவனை ஸ்தாபித்து பூஜித்தான் என்பதும், ஸ்ரீகிருஷ்ணன் மகனுக்காக ருக்மிணி ஸமேதனாகி

கைலாயத்திற்குச் சென்று தவம் செய்தான் என்பதும், தன் சர்வோத்தமத்வ, மோக்ஷபிரதத்வாதி மகிமைகளை சஜ்ஜனர்களுக்கு உபதேசம் செய்தவாறு (ராமதாரக மந்திர உபதேசத்தால்) லோககுரு எனப்படும் தன்னுடைய பக்தர்களில் சிறந்தவனான சிவனுக்கு செய்த மரியாதை என்று சிந்தித்தாலும், இவற்றில், ஸ்ரீஹரியின் மகிமையே வெளிப்படுகிறதே தவிர, வேறொன்றும் இல்லை. ஸ்ரீஹரி சர்வோத்தமன் என்று வேதாதி ஆகமங்களும் இதையே சொல்கின்றன. இந்த கருத்தே இந்த பதத்திலிருந்தும் நிரூபிக்கப்பட்டுள்ளது.

**ஹரனாரு புராணக$^3$ளு விரஞ்சனாரு புராணக$^3$ளு**
**ஹரவிரஞ்சரல்லவெந்து$^3$ ஹிரியரெ மன்னிஸலாகி$^3$**
**பரமஸித்தா$^3$ந்த தோரித$^3$ரெனிப பு$^3$த$^3$ரிகெ$^3$ |**
**புராணக$^3$ள மேலெ மாடு$^3$வ பரமாத$^3$ர ஸல்லதெ$^3$ய்ய**
**து$^3$ராக்$^3$ரஹ மாட$^3$பே$^3$ட$^3$ கு$^3$ருமதவ பி$^3$ட$^3$பே$^3$ட$^3$**
**ஸிரியரஸ ஹயவத$^3$ன ஆரு புராணக$^3$ள நோடி$^3$ ||14**

ஹரன - சிவனே (சிவனே ஜகத்கர்த்தனான சர்வோத்தமன் என்று) சிறந்தவன் என்று கூறும்; ஆரு புராணகளு - ஆறு தாமஸ புராணங்கள்; விரஞ்சன - சதுர்முக பிரம்மனின் சிறப்பினைக் விளக்கும் ஆரு புராணகளு - ஆறு ராஜஸ புராணங்கள்; (18 புராணங்களில் இவ்வாறு சிவ, பிரம்மர்களுக்கு தலா ஆறு என மொத்தம் 12 புராணங்கள் உள்ளன); ஹர விரஞ்சரல்லவெந்து - சிவனோ, பிரம்மனோ தேவோத்தமர்கள் அல்ல என்று; ஹிரியரே - ஞானிகளே (புகழ்பெற்ற ரிஷிகளான தத்வஞானிகளே); மன்னிஸலாகி - அங்கீகரித்திருக்கும்போது; (இதனால்) பரமஸித்தாந்த தோரிதரு - விஷ்ணுவே ஸர்வதேவோத்தமன் என்று, சிறந்த நிர்ணயத்தை சொல்லியிருக்கிறார்கள்; எனிப - இவ்வாறு ஸ்ரீவிஷ்ணுவே சர்வோத்தமன் என்று சொல்லும்; புதரிகெ - ஞானிகளுக்கு புராணகள மேலெ - இந்த சிவ, பிரம்மர்களின் புராணங்களின்

மேல் (அங்கு சொல்லப்பட்டிருக்கும் சிவ, பிரம்மனின் சிறப்புகளில்); மாடுவ - அஞ்ஞானிகள் காட்டும்; பரமாதர - அதிகமான நம்பிக்கை; ஸல்லதய்ய - ஒப்புவதில்லை; துராக்ரஹ மாடபேட - (அந்த புராணங்கள் சொல்வதைப் போல சிவனோ, பிரம்மனோ தேவோத்தமன் என்னும் விஷயத்தில்) நம்பாதே. ஸிரியரஸ - லட்சுமிபதியான; ஹயவதன - ஸ்ரீவிஷ்ணுவின் (ஸ்ரீவிஷ்ணுவே சர்வதேவோத்தமன் என்று நிர்ணயித்து நிரூபிக்கும்); ஆரு புராணகள - ஆறு சாத்விக புராணங்களை; நோடி - அவற்றை சிரவண, மனனாதிகளால் வணங்கி அறிந்து; குருமதவ பிடபேட - சாத்விக புராணங்களையே தாங்கிப் பிடித்து, அதில் சொல்லப்பட்ட ப்ரமேயங்கள் ஸ்ருதி சம்மதமானவை என்னும் சொல்லும் ஸ்ரீமன் மத்வாசார்யரின் மதத்தை, விட்டுவிடாதே.

ஸ்ரீவேதவியாசரால் இயற்றப்பட்ட புராணங்கள் 18. சாத்விக, ராஜஸ, தாமஸ என்று இவை மூன்று விதம். தலா ஆறு புராணங்கள். 'இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரம்ஹயேத்' என்று சொல்லும் ஸ்ருதி, தன்னால் சொல்லப்படும் பிரமேயங்களின் ஞானத்தை அவரவர்களின் யோக்யதைக்கேற்ப பெற்றுக்கொள்வதற்கு, ஒவ்வொருவரும் இதிகாச புராணங்களை சிரவணாதிகளால் வணங்க, கேட்க வேண்டும் என்று சொல்கிறது. 'இதிஹாஸ' என்றால், பாரத ராமாயணங்கள். ராமாயண என்று குறிப்பிட்டு சொன்னது ஏனென்றால், இதிஹாஸ என்றால் பாரதம் என்று மட்டுமே புரிந்து கொள்ளப்படுகிறது. வேதாதி ஆகமஞானம், த்ரிவிதரான ஜீவர்களுக்கு அவரவர்களின் யோக்யதைக்கேற்ப உண்டாவதற்கு, புராணங்களும் மூன்று விதங்கள் ஆகியிருக்கின்றன.

முக்தியோக்யர், நித்யசம்சாரிகள், தமோயோக்யர்கள் என்று த்ரிவித ஜீவர்கள், பிராக்ருத குணங்களின் நடுவே, முறையே சத்வ, ரஜஸ், தமோ குணங்களைக் கொண்டு, இவற்றால்

கட்டுப்பட்டவர்களாக இருக்கின்றனர். ஆகவே, அவர், சாத்விக, ராஜஸ, தாமஸர் என்று அழைக்கப்படுகின்றனர். தமோயோக்யர்கள் (தாமஸர்) சிவனையே சர்வோத்தமன் என்று அறிந்து, ஜீவ-ஈஸ-ஐக்ய என்று மித்யா ஞானத்தைப் பெற்று, தமஸ்ஸினை அடைகின்றனர். இவ்வாறு அவர்களை செய்ய வைப்பது ஹரபுராணங்கள். இவை தாமஸ புராணங்கள் எனப்படுகின்றன.

மிஸ்ர ஜீவர்கள் அல்லது ராஜஸர்கள், ஸ்ருஷ்டிகர்த்தன் என்னும் பிரம்ம தேவரையும், ஒரு வேளை காப்பவனான விஷ்ணுவையும், உத்தமன் என்று அறியப்படும் மிஸ்ரஞான ஸ்வரூபர்கள். சாதாரணமான ஒரு அரசனைப் போல, விஷ்ணு ஜகத்பிரபு என்று நினைத்தவாறு, ஸ்ரீவிஷ்ணுசர்வோத்தமத்வ ஞான நிஸ்சயம் கொண்டவர்களாக இருப்பதில்லை. பிரம்மனோ அல்லது விஷ்ணுவோ என்பதில் சந்தேக ஞானம் கொண்டவர்களாக இருக்கின்றனர். இவர்களின் சந்தேகத்தையே திடப்படுத்துமாறு, பிரம்மனின் சிறப்பினை சொல்லும் புராணங்கள், ராஜஸ புராணங்கள். இவை ஆறு பிரம்ம புராணங்கள்.

ஸ்ருதிக்கு ஏற்ற தத்வங்களையே வெளிப்படுத்தும் சாத்விக புராணங்கள், வேதத்தில் சொல்லப்பட்டவாறு, ஸ்ரீவிஷ்ணுவின் சிறப்பினை மிகத்தெளிவாக சொல்கின்றன. வேதத்திற்கேற்ப பிரமேயங்களை நிரூபிக்கின்றன என்னும் லட்சணமே சாத்விகமயமானது. தாமஸ ராஜஸ புராணங்களில் சிறிதளவிற்கு வேதத்திற்கு ஏற்ப விஷயங்கள் இருக்கின்றன எனலாம். அவற்றில் இருக்கும், அந்த பாகங்கள் ஒப்புக்கொள்ள வேண்டிய பிரமாணங்களே ஆகும்.

அதே போல, சாத்விக புராணங்களில்கூட, உத்தம, மத்யம, அதமங்கள் என்னும் விதங்கள் உள்ளன. வேதத்திற்கு எதிரான பாஷுபதாதி மதங்களுக்கேற்ப விஷயங்களை நிரூபிப்பது

'தர்ஷன' பாஷை எனப்படுகிறது. சாத்விக புராணங்களில் சில இடங்களில் மோஹகமான தர்ஷன பாஷையை பயன்படுத்தியிருப்பது உண்டு. இந்த பயன்பாட்டின் அதிக / குறைவுக்கேற்ப சாத்விக புராணங்கள் பல விதங்களாக மேலும் பிரிக்கப்படுகின்றன.

மத்ஸ்ய கூர்ம புராணங்கள் சாத்விக அதம புராணங்கள் என்றும், வாயுபுராணம் சாத்விக மத்யம புராணங்கள் என்றும், விஷ்ணு புராணம், பாகவத, காருட புராணங்கள் சாத்விகோத்தமங்கள் என்றும், காருட (பிரம்ம காண்ட) புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. சிவ, பிரம்மர்கள் உத்தமர்கள் என்று சொல்லக்கூடிய தாமஸ ராஜஸ புராணங்களை ஸ்ருதிக்கு ஏற்றது என்று ஞானிகள் ஒப்புக்கொள்வதில்லை. அவற்றிற்கு மரியாதை காட்டுவது, சாத்விஜ ஜீவர்களுக்கு ஹிதசாதகம் அல்ல.

சாத்விக புராணோக்தமான ஸ்ருதிகளால் புகழப்படும், பஞ்சபேத தாரதம்யாதி விஷ்ணு சர்வோத்தமத்வத்தையே சாதிக்கும், ஸ்ரீமன் மத்வமதத்தையே பின்பற்றி, தன்னை மேம்படுத்திக் கொள்ள வேண்டும். ஸ்ருதி சம்மதமும், ஞானிகளின் ஒப்புதலைப் பெற்றதுமான மதம் இதுவே என்று 'மத்வமதவே மதவு, சகல ஸ்ருதி சம்மதவு' என்றும்; 'மத்வமதத சித்தாந்த பத்ததி பிடபேடி பிடபேடி, பிட்டு கெடபேடி கெடபேடி' என்றும் ஞானிகள் பாடியிருக்கின்றனர். குருமதவ பிடபேட என்பது சஜ்ஜனர்களின் மேல் இருக்கும் மரியாதையால் செய்த ஹிதோபதேசம் ஆகும். குரு என்றால் ஸ்ரீமன் மத்வாசார்யரே. மத என்றால் அவரின் மதமே.

ந மாதவ ஸமோ தேவ: ந ச மத்வஸமோ குரு: ।
ந தத்வாக்ய ஸமம் ஷாஸ்த்ரம் ந ச தத்வஸம: புமான் ॥

என்று சொல்வதைப் போல, ஸ்ரீஹரிக்கு சமமான ஸ்வாமி இல்லை. ஸ்ரீமன் மத்வாசார்யருக்கு சமமான குருகள் இல்லை. அவரின் உபதேசத்திற்கு இணையான சாஸ்திரம் இல்லை. அந்த சாஸ்திரங்களை அறிந்தவனுக்கு சமமான புருஷன் இல்லை. சந்தேகங்கள் அற்ற ஞானம் கொண்டவனாகி, சிஷ்யர்களின் அனைத்து சந்தேகங்களையும் பரிகரிக்கக்கூடியவனே, குரு என்று ஞானிகள் கூறுவர். ஆகையால், சர்வக்ஞரும், அனைவரின் சந்தேகங்களை பரிகரிக்கக்கூடியவரும் ஆன பிரம்மனே லோககுரு. ஜகத்குரு.

அஸம்ஷய: ஸம்ஷயச்சித் குருருக்தோ மனீஷிபி: |
தஸ்மாத் ப்ரம்மா குருர்முக்ய: ஸர்வேஷாமேவ ஸர்வதா ||
(பாரத தாத்பர்ய)

வாயுவே பிரம்மன். ஸ்ரீவாயுதேவரின் மூன்றாவது அவதாரரே ஸ்ரீமன் மத்வாசார்யர். ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத்பாதாசார்யர்.

**ஒந்து3 பொ3ம்ம சித்து ஒந்து3 ஜீவ சித்து**
**எந்து3 ஸ்ருதி ஸ்கந்த4 சேதவெல்ல க்3ரந்தஹாஸ்ய**
**தி3ந்த3வரிகெ3 ஹரி ஜட3னூ ஹர ஜட3னூ மந்த3ஹாஸ |**
**தி3வ்ய ஜட3ரு மனுமுனிக3ளெல்ல**
**இந்தா2 ஷிவன வஹிஸிகொண்டு3 வாதி3ஸுவரு**
**ஹிந்து3 முந்த3ரியரெந்து3 ஹயவத3ன நக3னெ ||15**

ஒந்து பொம்ம சித்து - ஒரு பிரம்மசேதனன்; ஒந்து ஜீவசித்து - ஒரு ஜீவ சேதனன்; எந்து - இவ்வாறு பிரம்ம மற்றும் ஜீவ சேதனங்கள் (ஒந்து ஜீவசித்து என்று சொல்வதில், ஜீவ சேதனர்கள் என்னும் மொத்த சமூகத்தையே சொல்கிறார்கள் என்று அறிய வேண்டும்) வெவ்வேறு என்று, ஸ்ருதிஸ்கந்த - ஸ்ருதி சமூகம் (சொல்கின்றன); கிரந்தஹாஸ்யதிந்த - வேதாதி கிரந்தங்களின் கேலியினால் மட்டும் (அவற்றின் அர்த்தத்திற்கு எதிரான கேலிக்குக் காரணமான, அர்த்தத்தை அவற்றின் மேல்

சார்த்துவதால்); எல்ல சேதனவு - ஜீவ பிரம்மரும் ஜடமும் (அனைத்தும்) சேதனாத்மகமே (ஒரே சேதன ரூபமானவை); அவரிகெ - (பிரம்மசேதன ஒன்றே உண்மை என்று) வாதிப்பவர்களுக்கு (அந்த மாயாவாதிகளுக்கு); ஹரி ஜடனொ - ஸ்ரீஹரியே ஜடனோ (ஞான, இச்சா, க்ரியாதி சக்திகள் இல்லாத ஜட வஸ்து ஸ்வரூபனோ); ஹர ஜடனோ = சிவன் ஜடனா?; எந்தஹாஸதிந்த - இந்த கேலியான வாதத்தை முன் வைப்பதால்; மனுமுனிகளெல்ல - (மன்வந்தராதிபதிகளான, தர்ம சாஸ்திரங்களை துவக்குபவர்களான) மனுகள் மற்றும் சப்த ரிஷியாதி ஞானிகள் அனைவரும், ஜடரு - ஜட வஸ்துகளா? (ஜட ஜீவ பிரம்ம என்னும் வேறுபாட்டிற்கு இடம் இல்லை என்பதால்); இந்தா ஷிவன - (மாயாவாதத்தைப் போல) ஜடனும் ஆகும் சிவனை; வஹிஸிகொண்டு - அவனிடம்; வாதிசுவரு - (தேவ ஸ்ரேஷ்டன் என்று) வாதிப்பர்; ஹிந்து முந்தரியரெந்து - பூர்வ அபர ஞானம் இல்லாத (எந்தவொரு விஷயமும் அறியாத) அஞ்ஞானிகள் என்று; ஹயவதன - ஸ்ரீஹரி; நகனெ - சிரிக்கிறான் அல்லவா? (எத்தகைய மூர்க்கர்கள் என்று சிரிக்கிறான்).

மாயாவாதிகள் பிரம்ம ஒன்றே சத்யம் - மற்ற அனைத்தும் மித்யா என்று சொல்வதால், வரும் நகைக்கும்படியான விஷயங்களை சொல்லி, அந்த மத-தத்வங்களில் நம்பிக்கை வைக்கும் சுஜீவர்களைக் கண்டு, ஸ்ரீஹரி புன்னகை பூக்கிறான். இவர்களின் அவிவேகத்தைக் கண்டு சிரிக்கிறான். மாயாவாதத்தைப் போல, சிவனும் ஜடனே ஆகவேண்டியிருப்பதால், அவர்கள் சிவனில் பாரபட்சம் காட்டி, அவனை ஜகத்ஸ்ருஷ்ட்யாதி கர்த்தனான, பிரம்மன் என்று (ஈஷ்வரன் என்று), தேவ ஸ்ரேஷ்டன் என்று அறிவதற்கு காரணம் இல்லை. அல்லது, விஷ்ணு முதலானவர்களை 'பஞ்சாயதன'த்தில் பூஜிப்பதால், விஷ்ணு சமன் என்று சிந்திப்பது சரியல்ல. சிவனில் இவ்வித பாரபட்சத்திற்கு அவரின் மத விஷயங்கள் சந்தர்ப்பமே கொடுப்பதில்லை.

ஏகமாத்ர தத்வமான பிரம்மவஸ்துவில் அஞ்ஞானம் சொல்லப்படுகிறது. இந்த அஞ்ஞானமயமான குற்றச்சாட்டினால் பிரம்மன் - ஈஷ்வர, ஜீவ, ஜகத் என்னும் ரூபங்களால் தன்னை காட்டிக் கொள்கிறான். பிரம்மன் ஜீவ ஜடங்களால் வேறுபட்டவன் அல்ல. அஞ்ஞானம் பாவ ரூபமானது மற்றும் அனாதியானது. ஆனாலும், அது சத்யமல்ல. அஸத்யமும் அல்ல. அனிர்வசனீயமானது (எப்படியென்று சொல்ல முடியாத ஸ்வரூபம் உள்ளது). இது ஆவரண மற்றும் விக்ஷேபங்களைக் கொண்டது.

ஆவரண என்றால் ஸ்வரூப பிரகாசத்தை கட்டுப்படுத்துவது. ஸ்வரூபத்தில் இருக்கும் துக்காதிகளை வெளிப்படுத்துவது விக்ஷேபம். இத்யாதி விஷயங்களை படிக்க மட்டுமே முடியும். அவற்றை புத்தியினால் அறிந்துகொள்வது விவேகிகளாலும் சாத்தியமல்ல. ஜீவ ஜடஸ்வரூபத்தின் ஜகத், பிரம்மனால் பின்னமல்ல என்று அறியும் இவருக்கு, ஹரி, ஹர, மனு, ரிஷ்யாதிகளும்கூட 'ஜட' என்றே தெரிகிறது.

'ஜுஷ்டம் யதா பஷ்யத்யன்யமீஷம்'; 'த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா'; 'ஷ்ருண்வே வீர உக்ரமுக்ரம் தமாயன்' ஆகிய எண்ணிக்கையற்ற ஸ்ருதி வாக்கியங்கள் ஜீவ பிரம்மர்கள் பின்னர்கள் என்று சொல்கின்றன. ஜீவ சேதனர், முக்தரான பிறகும் பிரம்மபின்னரே என்று சொல்லும் ஸ்ருதி வாக்கியங்கள் ஏராளமாக உள்ளன. ஜீவபிரம்ம பேதம், ஸத்யமும் நித்யமும் ஆனது என்று 'ஓம் பேதவ்யபதேஷாத் ஓம்' ஆகிய ஸூத்ரங்களில் (பிரம்ம ஸூத்ர) நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

**நூறு ருத்$^3$ரர வேளெ கார்யவாத$^3$ரேனவரு**
**ஈரேளுலோகவனவரு ஸம்ஹரிஸலரியரு க$^3$ட$^3$**
**கார்யவில்லத$^3$ ஷிவர பேளெ அத்$^3$வைதமத |**
**ஹாரிஹோக$^3$தெ$^3$ ப$^3$ரிதெ$^3$ ஹலவு ஹம்ப$^3$லிஸதெ$^3$**
**ஸ்ரீரமண ஹயவத$^3$னனொட$^3$ம்ப$^3$ட்டரிப்$^3$ப$^3$ரனு**
**தூ$^3$ர களசித$^3$ரெந்து$^3$ பூர்ணத$^3$வர நம்பு$^3$ ||16**

அவரு - ருத்ரர் அல்லது பிறர்; நூறு ருத்ரர வேளெ - 100 ருத்ரரின் சாதனகால (ருத்ரதேவனின் சாதன காலம் 50 பிரம்ம கல்ப), அதாவது 5000 பிரம்ம கல்பங்களின் காலம்; கார்யவாதரேனு - செயல்களில் ஆயிரக்கணக்கான பிரம்ம கல்பங்களில் தீர்க்க காலம் வரை சிரமப்பட்டாலும்); அவர் - இவ்வாறு சிரமப்படும் ருத்ரர் அல்லது பிறர்; ஈரேளு லோகவனு - 14 லோகங்களை; ஸம்ஹரிஸலரியரு - லயம் செய்வதற்கு சமர்த்தர் அல்ல (14 உலகங்களை லீலைகளால், விருப்பத்தாலேயே சம்ஹரிக்கும் (நாசம் செய்யும்) சமர்த்தர் ஸ்ரீஹரியே. உலகத்தின் லயகர்த்தன் ஸ்ரீஹரியில்லாமல் வேறு யாரும் அல்ல). கட - இவ்வாறு சொல்வது ஸ்ருதி பிரசித்தமானது; கார்யவில்லத ஷிவர பேளெ - ஜகத்கர்த்ருத்வ இல்லாத (ஸ்ருஷ்டி ஸ்திதி லயாதி கர்த்ருத்வ இல்லாத) ருத்ரரை கூறினால்; அத்வைத மத - மாயாவாத மதம்; ஹாரிஹோகதெ - நிற்கமுடியாமல் சிதறிப் போகுமல்லவா? (யுக்திகளை எதிர்த்து நிற்க முடியாமல் ஓடிப்போகிறது); ஸ்ரீரமண ஹயவதனனு - லட்சுமிபதியான ஸ்ரீவிஷ்ணு; ஒடம்பட்டரெ - ஸ்ருஷ்டி சம்ஹார காரியங்களில் சேவார்த்தமாக ஸ்வீகரித்திருக்கும்; இப்பரனு - பிரம்ம ருத்ரர் என்னும் இருவரை; தூர களசிதரெந்து - ஸ்ருஷ்டி சம்ஹார கர்த்தர் என்னும் பெயரை இழந்தவர்கள் என்று; பரிதெ - வீணாக; ஹலவு - பற்பல விதமாக; ஹம்பலிஸதெ - சிந்தித்தவாறு வருத்தப்படாமல்; பூர்ணதவர நம்பு - ஸ்ரீபூர்ணப்ரக்ஞர சித்தாந்தங்களை அல்லது அவரை பின்பற்றுபவர்களை பின்பற்று.

ருத்ரதேவனின் மோக்ஷ சாதனை காலம் 50 பிரம்ம கல்பங்கள். சேஷ பதவியிலிருந்தே இவருக்கு முக்தி. சேஷ பதவிக்கு யோக்யரான ஜீவ வர்க்கமே தனியானது. இந்த ஜீவர்கள் 40ம் பிரம்ம கல்பத்தில் சேஷ பதவியின் தகுதியைப் பெறுகின்றனர். 'ஆரைது நவகல்பாவஸானகெ ஐதுமனு சேஷனபதவ பார்வதீஸஹித' என்று ஹரிகதாம்ருதசாரம் சொல்கிறது. 39 கல்பங்கள் முடிந்த பிறகு என்றால் 40ம் கல்பத்தில் என்று பொருள். 'ததைவ சத்வாரிஷத்பி:பதம் ஷைவம் ச ஜன்மபி:' என்று பாகவத தாத்பர்ய சொல்வதைப் போல, ருத்ரதேவர் 40 கல்ப சாதனையை முடித்துக்கொண்டு, 10 பிரம்ம கல்ப தவம் செய்து ['தஷகல்ப தபஸ்சீர்ணம் ருத்ரேண லவணார்ணவே' (அனுவியாக்யான)]

பிரம்மணாம் ஷதகாலாத்து பூர்வ மாரப்த ஸம்க்ஷய: ।
பிரம்மணஸ்த்வேவ தாவத்வம் பஞ்சாஷத் பிரம்மணஸ்ததா ।
ருத்ரஸ்ய விம்ஷதேவ ஸ்யாச்ச்சக்ரஸ்யார்காதிகே தஷ ।
(பாகவத தாத்பர்ய)

ஆகிய வாக்கியங்களில் சொல்லியிருப்பதைப் போல, மொத்தம் 50 கல்பங்களில் முக்தன் ஆகிறார். மேலும் இருக்கும் பிரமாண வாக்கியங்களின் பாவார்த்தம் என்னவெனில்:

உப்பு சமுத்திரத்தில் ருத்ரர் 10 கல்ப தவத்தை செய்கிறார். பிரம்மபதவிக்கு வருபவருக்கு (பிரம்மதேவருக்கு) 100 பிரம்ம கல்ப பூர்வத்தினால், சுகப்ராரப்தத்தின் குறைவும், ஆனந்தாதிஷய ஸாதனமும், 50 பிரம்ம கல்ப ருத்ரனுக்கும், 20 கல்ப இந்திரனுக்கும், சூர்யாதிகளுக்கு 10 கல்பமும், ஸாதனா காலங்களாக இருக்கிறது. ருத்ர பதவியிலிருந்து சேஷ பதவிக்கு வரும் தகுதியைப் பெற்ற பிறகு, மோட்ச விசேஷார்த்தமாக 10 கல்ப தவம் செய்ய வேண்டியிருக்கிறது என்று அறிய வேண்டும். அதாவது 50ம் கல்பத்தில் சேஷ

பதவியிலிருந்து, அப்போதைய பிரம்மனுடன் முக்தி என்று அறிய வேண்டும்.

லயகர்த்தன் என்று பெயர் பெற்றுள்ள ருத்ரதேவரோ, பிறரோ, ஆயிரக்கணக்கான பிரம்ம கல்ப காலம் கஷ்டப்பட்டாலும், இந்த புவனத்தை லயம் செய்ய முடியாது. ருத்ராந்தர்யாமியான ஸ்ரீநரசிம்மரூபி ஸ்ரீவிஷ்ணுவே லயகர்த்தன். அவன் நொடிப்பொழுதில், தன் விருப்பத்திலேயே, தன் லீலையினால் அனைத்தையும் அழிக்கவல்ல ஸ்வதந்த்ர சாமர்த்தியம் உள்ளவன். ருத்ரனை ஒரு காரணமாக வைத்துக்கொண்டு, அவனுக்கு லய கர்த்தன் என்று பெயரைக் கொடுக்கிறான். லய ரூபத்தின் தன் சேவையை ஏற்றுக்கொண்டு அருள்கிறான்.

(தத: காலாக்னிருத்ராத்மா யத்ஸ்ருஷ்ட்டமிதமாத்மன: |
ஸன்னியச்சதி தத்காலே கனானீகமிவானில: ||
(பாகவதம்)

ப்ரளயகாலம் வந்தபோது, யம, பிரளயக்னி மற்றும் ருத்ரரில் அந்தர்யாமியான ஸ்ரீ நரசிம்மன், அந்த அதிஷ்டானங்களை நிமித்தமாக வைத்துக்கொண்டு, தன் மூலமாகவே (சதுர்முகாந்தர்யாமியாகி) படைக்கப்பட்ட ஜகத்தினை, வாயு மேக ஸமுதாயத்தை, க்ஷண மாத்திரத்தில், அனாயாசமாக சம்ஹரிக்கிறான்'. பாகவத தாத்பர்யத்தில் 'மத்ஸ்யாதி ரூபி போஷயதி ந்ருஸிம்ஹோ ருத்ர ஸம்ஸ்தித: | விலாபயேத்விரிஞ்ச ஸ்த:ஸ்ருஜதே விஷ்ணுரவ்யய:'. அதாவது, மத்ஸ்யாதி ரூபங்களால் ஸ்ரீஹரி ஜகத்தினை காக்கிறான். ருத்ர ஸ்திதனான ஸ்ரீ நரசிம்மன் சம்ஹரிக்கிறான். சதுர்முகனில் இருக்கும் ஸ்ரீவிஷ்ணு படைக்கிறான். என்று சொல்லப்பட்டிருக்கிறது).

இதைப் போலவே, சதுர்முக பிரம்மதேவனில், பிரம்மாந்தர்யாமியாக நின்று, ஸ்ரீவிஷ்ணு தானே உலகத்தைப்

படைத்தவாறு, பிரம்மனுக்கு ஸ்ருஷ்டிகர்த்தன் என்னும் பெயரைக் கொடுத்து, ஸ்ருஷ்டி கார்ய ரூபமான தன் சேவையை ஏற்றுக்கொண்டு அருள்கிறான்.

பிரம்ம ருத்ர இருவருக்கும் ஸ்ருஷ்டி, லயங்களுக்கு எவ்வித ஸ்வதந்த்ர சாமர்த்தியமும் இருப்பதில்லை. அவரின் மற்றும் சர்வ ஜீவரின் ஸ்வரூப சாமர்த்தியங்கள் எப்போதும் ஸ்ரீஹரியின் அதீனமாகவே இருக்கிறது.

பசுபதி என்பது ருத்ரதேவரின் இன்னொரு பெயர். லயகர்த்ருத்வத்தால் குறிப்பிடப்படும் ஜகத்காரணத்வம், பசுபதிக்கு பொருந்துவதில்லை என்று 'ஓம் பத்யுரஸாமஞ்சஸ்யாத் ஓம்' என்னும் (பிரம்மசூத்திரத்தில்) நிர்ணயிக்கப்பட்டுள்ளது. 15ம் பத்யத்தின் விளக்கத்தை ஒரு முறை படிக்கலாம்.

மாயாமதத்தைப் போல, அஞ்ஞானம் மாயா மற்றும் அவித்யை என்று இரு விதங்களாக இருக்கின்றன. மாயா காரியங்களை செய்யக்கூடிய பிரம்மனே, ஈஸ்வரன். சிவ, ஷங்கர, ருத்ராதி நாமங்களைக் கொண்டவன். இவன் மாயாமயங்களான சர்வக்ஞத்வ, சர்வேஷ்வரத்வாதி குணங்களைக் கொண்டவனாகி, உலகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹாராதிகளை செய்கிறான் என்று சொல்லப்படுகிறது.

ஈஸ்வரனுக்கு ஜகத்காரணத்வ (லயகர்த்ருத்வ) இல்லை என்றால் உண்டு என்று சொல்லும் மாயாவாத மதம் தோற்றுப்போனதே சரி என்னும் யுக்தியை இந்த பத்யத்தில் நிரூபித்திருக்கிறார். மாயாவாத மதமே அத்வைத மதம் என்று அழைக்கப்படுகிறது. பிரம்மம் ஒன்றே சத்யம் என்றும், ஜீவ, ஜட, பிரம்மரில் எவ்வித பேதமும் இல்லை என்றும் சொல்லும் இந்த மதத்திற்கு 'அத்வைத மத' என்ற பெயரும் சரியாகவே பொருந்துகிறது.

தமஸ்ஸாதகவான மித்யாஞானத்தை விளக்கும், பிரபல விரோதியான அத்வைத மதத்தை ஸ்ருதிக்கு பொருந்துவதான யுக்திகளால் நிராகரித்து, ப்ரமாணங்களால் நிரம்பியதான, ஜீவஜடாத்மக சத்ய ஜகத்தின் ஸ்ருஷ்ட்யாதி அஷ்ட கர்த்ருத்வங்களை (உத்பத்தி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோக்ஷ) தனது லீலைகளால் நிர்வகிக்கும் ஸ்வதந்த்ர ப்ரபுவான ஸ்ரீஹரியே சர்வக்ஞத்வாதிகள் உள்ள மஹாமஹிமனும், தோஷங்கள் அற்றவனும், ஞானானந்தாதி அனந்த கல்யாண குணபரிபூர்ணனும், சம-அதிக ரஹிதனுமான சர்வோத்தமன் என்று இந்த சிறிய கிரந்தத்தில் நிரூபித்து, அனைத்து சத் ஆகமங்களின் சாரத்தையே சஜ்ஜன லோகத்திற்கு வழங்கியிருப்பவர், கிரந்தகர்த்தரான மஹானுபாவரான ஸ்ரீவாதிராஜ ஸ்ரீபாதங்களவர்.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

**ஆசார்ய: ஸ்ரீமதாசார்யா: ஸந்து மே ஜன்மஜன்மனி**

**ஓம் தத்ஸத்**

***